ஸ்ரீ

# பகவத் ராமானுஜர்



ஸ்ரீ இராமானுஜர் ஆயிரமாவது ஜயந்தி விழாக்குழு

வெளியீடு

ஸ்ரீ



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

சமுதாய சிற்பி

# பகவத் ராமாநுஜர்




வெளியிடுபவர்கள் :

**ஸ்ரீ இராமாநுஜர் ஆயிரமாவது ஜயந்தி விழாக்குழு**

ஆசிரியர்

ஸ்ரீ ராமாநுஜர் ஆயிரமாவது ஜயந்தி விழாக்குழு சார்பாக இந்த புத்தகத்தை வெளியிட அனுமதி தந்து ஆசி வழங்கிய விழாக் குழுவின் போதகர், **ஸ்ரீ பெரும்புதூர் அப்பன் பரகால ராமானுஜ எம்பார் ஜீயர் ஸ்வாமிகளின்** பாத கமலங்களை வணங்குகிறேன்.

நன்கொடை : 25/-


**ஸ்ரீ இராமாநுஜர் ஆயிரமாவது ஜயந்தி விழாக்குழு**

**ஸ்ரீபாதுகா, கிருஷ்ணா அடுக்ககம்,**

**"H" ப்ளாக், 1053, பூவிருந்தவல்லி நெடுஞ்சாலை,**

**சென்னை - 600 084**

☎ : 044 23452120 / 23452121.

Email: ramanujavikas@gmail.com www.ramanujaseva.in

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

# ஸ்ரீ ராமானுஜர் வளர்த்த வைணவம்

**ஸ்ரீ.உ.வே குமாரவாடி சே. ராமானுஜாசாரியர்**
**ஆசிரியர் - திருமால்**

ஸ்ரீ ராமானுஜர் தம் வாழ்நாளிலேயே பல்லாயிரக்கணக்கான சிஷ்யர்களைப் பெற்றவர். எழுபத்து நான்கு சிம்மாசன அதிபதிகளை நியமித்தவர் எழுநூறு ஜீயர் (முக்கோல்பகவர்)கள் பின் தொடர நின்றவர். ஆழ்வார்களை அடியொற்றி கோயில் வழிபாட்டு நெறிகளை சீரிய முறையில் திருத்தியமைத்தவர். கோயில்கள், மடங்கள், ஆசார்ய திருமாளிகைகள், இராமானுஜ கூடங்கள் என்று இவரால் வைணவம் வளர்ந்தோங்கியது. நூற்றிருபது (1017-1137) ஆண்டுகள் இம்மண்ணுலகில் வாழ்ந்து பல அரிய பெரிய சமய, சமுதாய சாதனைகளைப் புரிந்த மகாபுருஷர் ராமானுஜர்.

மனித இனத்துக்குச் சீரான ஆன்மீக உணர்வுக்கும், அறநெறி வாழ்வுக்கும் தாமே வாழ்ந்து பிறருக்கும் வழிகாட்டிய ஆசாரியப் பெருந்தகை ராமானுஜருக்கு நிகர் வேறு ஒருவர் இல்லை எனலாம்.

ஆதலால் தான், அவரை நேரில் கண்டு அவருடன் வாழ்ந்த திருவரங்கத்து அமுதனார், கலித்தொகை அந்தாதியில் நூற்றெட்டு பாசுரங்களில் அரியதொரு காவியம் படைத்தார். இவ்வாறே அவரது காலத்தவர் பலர், பல மொழிகளிலும் நூல் செய்து போற்றினர். விக்ரகம் வடித்து ஸ்ரீ ராமானுஜரை அவரது வாழ்நாளிலேயே வழிபடத் தொடங்கினர்.

ஆதிசங்கரருக்கும் ஆனந்த தீர்த்தருக்கும் கிட்டாத பேறு ராமானுஜருக்குக் கிட்டியது.

அதாவது திராவிட வேதம் தந்த பெரியார் நம்மாழ்வார், சடகோபன் பாமன்னு மாறனின் அடிபணிந்து உய்யும் பேறு இராமாநுஜருக்கு கிட்டியது ஒப்பற்ற நற்பேறாகும்.

ஸ்ரீ வைணவ மரபினர் பராங்குச, பரகால யதிவாதிகள் என்று நம்மாழ்வார், கலியன் என ஆழ்வார்களைக் குறிப்பிட்டு ஆசார்ய பரம்பரையில் இராமாநுஜரை முதன்மைப்படுத்தினர்.

வேதாந்த தேசிகரும், "குருபரம்பரை" மாலையின் நடுவில் திகழும் நாயகரத்தினமாக வருணித்தார்.

பூருவாசாரிய குருபரம்பரையின் முடி(வு) மணியாக அரங்கனுக்கும் ஆசானாக விளங்கிய ஸ்ரீமத் மணவாள மாமுனிகள் இராமானுஜரின் மறுபிறவி என்று கருதப் பெற்றதோடு, ராமானுஜ பக்தியே உருவானவர் என்று பொருள்பட, யதீந்திர பிரவணர் என்றே போற்றவும் பெற்றார்.

முற்கால வைணவ ஆசாரியர்கள் மட்டுமின்றி பிற்கால தமிழக மறுமலர்ச்சிக்கு வழி வகுத்த மகாகவி பாரதியும் இராமானுஜரை குறித்துப் பேசியும், எழுதியும் பெருமைப்படுத்தியுள்ளார்.

பாரதிதாசனும், முக்தியோ சிலரின் சொத்தென இருக்கையில் இத்தமிழ்நாடு தன் இருந்தவப்பயனாய் இராமானுஜனை ஈன்றதன்றோ! என்று நாத்திகம் பேசியநாவும் வளையப் பாடியுள்ளார். இராமானுஜனை தமிழ் நாட்டின் தவப்பயன் என்ற பாவேந்தரின் கருத்து பாரட்டத்தக்கது.

அர்த்தமுள்ள ஹிந்து மதம் எழுதிய கவிஞர் கண்ணதாசனும் ஹிந்து மதம் மறு மலர்ச்சியுற்றது இராமானுஜரால் என்று எழுதினார்.

இவற்றுக்கெல்லாம் காரணத்தை ஏற்கனவே ஒரு பாசுரத்தில் விளக்கிட்டார் அக்காலத்து அமுதனார்.

**மண்மிசை யோனிகள் தோறும் பிறந்து எங்கள் மாதவனே**
**கண்ணுற நிற்கிலும் காணகில்லா - உலகோர் களெல்லாம்**
**அண்ணல் இராமாநுசன் வந்து தோன்றிய அப்பொழுதே**
**நண்ணரு ஞானம் தலைக் கொண்டு - நாரணற்காயினரே**

இறைவன் எடுத்த அவதாரங்கள் செய்ய இயலாத சாதனையை அண்ணல் இராமானுஜன் மிக எளிதில் செய்து காட்டினார் என்பது பாடல் கருத்து.

அறுமசயக் குழப்பங்கள், மூடபக்திகள், சிறு தெய்வ வழிபாடுகளால் சீரழிந்த கேடுகள் அனைத்தையும் அறுத்து எறிந்த சீர்திருத்தச் செம்மல் இராமானுஜர்.

**"ஆனது செம்மை" அறநெறி - பொய்மை அநுசமயம்**
**போனது பொன்றி - இறந்தது வெங்கலி நீசச்சமயங்கள்**
**மாண்டன தென்குருகை வள்ளலின்**
**வாட்டமிலா வண்தமிழ்மறை வாழ்ந்தது**

மாறன் மறை உணர்ந்ததனால் திசையனைத்தும் ஏறும் குணன் இராமானுஜரின் சாதனைகள் பல.

**காயமே இது பொய்யடா! காற்றடைத்த பையடா!!**

என்ற வெட்டிப் பேச்செல்லாம், மாயா வாதமெல்லாம் மாய்ந்தொழிய இராமானுஜர் இந்த உலகம் மெய், நீயும் அதில் சத்தியம், உனது சிந்தை, சொல், செயல் அனைத்தும் உண்மை என்று கூறி இம்மை வாழ்க்கையில் ஒரு பிடிப்பும் கடமை நெறியும் வகுத்துத் தந்தார்.

இறைவன் இருப்பிடங்கள் நூற்று எட்டில் வானமும், கடலும் போக மீதமுள்ள நூற்று ஆறு இடங்களை இந்த பாரத மண்ணிலேயே காட்டியருளிய ஆழ்வார்களின் அடியொற்றிய இராமானுஜர். நாடெங்கும் சென்று வழிபட்டுச் சீரிய முறையில் ஆணையிட்டு, அவை நாளும் வளர வழி வகுத்தார்.

அடியார்களுக்கு நன்னெறி! நடத்தைகளை வலியுறுத்தி வாழ்வின்பத்தை பொருள் பொருந்தியதாக மாற்றி, இம்மைக்குச் செம்மை தேடினார் பெரும்பூதூர் வந்த வள்ளல்.

> **“வண்மையினாலும் தன் மாதகவாலும் மதிபுரையும்**
> **தண்மையினாலும் இத்தாரணியோர்கட்கு தான் சரணாய்**
> **உண்மை நல்ஞானமுரைத்த இராமானுசனை உன்னும்**
> **திண்மையல்லால் எனக்கில்லை மற்றோர் நிலை தேர்ந்திடிலே”**

என்ற அமுதனாரின் வாக்கு மனிதாகப் பிறந்த ஒவ்வொருவருக்கும், உய்வுக்கு உரியதாகும். இதனால் வைணவமே சிறந்ததாகும்.

உண்மை உணர்ந்த ஸ்ரீ வைஷ்ணவன் தான் நீர் அருந்த உதவும் பாத்திரத்துக்கு “இராமாநுஜன்” என்று பெயரிட்டுப் போற்றுகிறான்.

உடலைப்பற்றி வரும் வருணாசிரமத்தைக் காட்டிலும் உயிரைப் பற்றி எழும் உயர்ப் பண்புகளே போற்றத்தக்கவை என்பதை பிள்ளை உறங்காவில்லிதாசர் பொன்னாய்ச்சி தம்பதியர்க்கு தம் மடத்திலேயே இடமளித்து எடுத்துக்காட்டினார்.

குருவின் ஆணையை மீறி, மதில்மேலேறி, மந்திரப் பொருள் கூறி மானிடர்க்கு உய்வு நெறி காட்டிய உத்தமர் இராமானுஜர் தம் இளமை தொட்டே புரட்சிப்பாதையில் வளர்ந்தவர்.

வைதிகர் வயிற்றில் பிறந்தாராயினும் சாதி கடந்து, வைணவப் பெரியவர் திருக்கச்சி நம்பியின் எச்சிலுக்கு ஏங்கி நின்றவர்.

வேதப் பொருளைத் திரித்துக் கூறிய ஆசிரியருக்குத் தெளிவு பிறப்பித்து சீடராக்கிக் கொண்டவர்.

வைதிகத்தோடு நின்றுவிட எண்ணி வைணவ வாழ்வுக்குத் துணைநிற்க மறுத்து விட்ட, மனைவியை துறந்து விட்டவர் இராமானுஜர். புத்தரின் துறவைக் காட்டிலும் மேம்பட்ட துறவு இது. தனக்கு இன்னா செய்தார்க்கும் நன்னயம் செய்திடும் அன்பும், பண்பும் சிலுவையில் அடியுண்ட யேசுவின் செயலில் காண்கிறோம். இராமானுசரின் சீடர் குணம் மிக்க கூரத்து ஆழ்வான், தான் கண்ணிழக்கவும் தமது பரம ஆசார்யர் பெரிய நம்பி கண்ணிழப்புடன் உயிர் துறக்கவும் காரணமாயிருந்த நாலூரான் என்பவருக்கும், நற்பேறு அருள ஆண்டவனை வேண்டிய செயல் இயேசுவின் அன்பையும் விஞ்சியது.

உலகம் போற்றும் காந்தியடிகள் தீண்டாதார் என்று இருந்தவர்களை அரிஜனங்கள் என அழைத்து உயர்த்தி மகாத்மாவானார்.

ஆயிரமாண்டுக்கு முன்னரே ஆதிதிராவிடர்களை திருக்குலத்தார் என அழைத்து ஆலய வழிபாட்டுக்கு வழிவகுத்தவர் இராமானுசர், மகாத்மாவுக்கு முன்னோடியாவார்.

சென்றவிடமெல்லாம் சாதனை புரியும், அரிய ஆற்றலை பன்னிரு ஆண்டுகள் கர்நாடக மாநிலம் மேல் கோட்டையில் தங்கிய தமிழர் இராமானுஜரை வைர முடியாக இன்னும் நாம் காணலாம். தொண்டனூரில் அணைகட்டி ஏரியமைத்து மக்கள் நலவாழ்வுக்கு வழிகாட்டியவர் இராமானுஜர். அங்கு அந்நியமதக் கன்னியொருத்திக்கு (முஸ்லிம் பெண்) நாரணன் தாளில் இடமளித்து, விக்ரக வழிபாட்டைச் சிறப்பித்தது இராமானுசரின் மதங்கடந்த ஆன்மிக உணர்வை எடுத்துக்காட்டுவதாகும்.

பிட்டி தேவனை விஷ்ணுவர்த்தனனாக்கி பேலூரில் கலைக்கூடம் கண்டவர் இராமானுஜர். முன்னோர் மொழிந்த முறைகளின் உட்கருத்து அறிந்து அவற்றுக்கு முரணின்றி பல புதுமைகளை ஏற்று வைணவ மறுமலர்ச்சியும் வளர்ச்சியும் கண்டவர் இராமானுஜர்.

வேதங்கள், இதிஹாச புராணங்கள், தோத்திரங்கள் மற்றும் வடமொழியில் வல்லவரான இராமானுஜர், ஸ்ரீ ஆண்டாளின் கோதை தமிழில் ஆழ்ந்து, திருப்பாவை ஜீயர் என்ற பெயரும் பெற்றார்.

திருவாய் மொழியின் மணம் தரும் இன்னிசை மன்னும் இடந்தொறும் புக்கு நிற்கும் குணம் திகழ் கொண்டல் இராமானுசனை சொல்லார் தமிழழொரு மூன்றும் - சுருதிகள் நான்கும் எல்லையில்லா அறநெறி

யாவும் தெரிந்தவன் - எண்ணருஞ்சீர் நல்லார் பரவும் இராமானுசன், என்று பொருத்தமுடன் போற்றினார் அமுதனார்.

இராமானுஜரின் வரலாறு வைணவ வளர்ச்சியின் வரலாறாகவே அமைந்தது.

திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதிப் பெருமாளின் அருளால் ஸ்ரீபெரும்பூதூரில் தோன்றிய இளையாழ்வார், காஞ்சி அருளாளன் வழங்கத் துறவு பூண்டு, திருவரங்கம் பெரிய கோயில் சேர்ந்து, அரங்கன் செல்வம் அனைத்தும் திருத்தி வைத்து உபய விபூதிக்கும் உடையவராக உயர்ந்தார்.

காரேய் கருணை இராமானுஜர் தாம் நரகம் புகினும், ஏற்பேன் என்று கூறி ஆசையுடையோர்க்கெல்லாம் கூறுமின், என வரம்பறுத்து மந்திரப் பொருளை வெளியிட்டார். இதனால் எம்பெருமானார் ஆனார். ஸ்ரீ வைஷ்ணவம் எம்பெருமானார் தரிசனமாயிற்று. எம்பெருமானார் இந்தத் தரிசனத்தை வளர்த்த அந்த செயலை அறிவிக்க நம்பெருமாள் இப்படி பேரிட்டு நாட்டி வைத்தார்.

ஸ்ரீ பாஷ்யகாரர் என்ற பெருமையுற்று இராமானுசர் வடமொழி நூல்களில் உரைகள் மட்டுமின்றி, திராவிட வேத உரைகளிலும் தமது அரிய கருத்துக்களை வெளியிட்டு நாடெங்கும் பரப்பியவர். வடமொழி மறை நூலுக்குத் தமிழ் மறை நூல் தெளிவை ஊட்டியவர்.

வைதீக மதம், சமுதாய நலனுக்காக நான்கு வருணங்களை வகுத்து சர்மா, வர்மா, குப்தா, தாசா என்று பெயரிட்டது. ராமானுஜரோ நாம் எல்லாருமே திருமாலுக்கு அடிமை என்பதால் தாசன் என்று சொல்லுக்கு (நான்காம் வருணப் பெயருக்கு) ஏற்றம் அளித்துப் பெருமை சேர்ந்தவர் இராமானுஜர். பஞ்சமரையும் திருக்குலத்தாராக்கி, ஸ்ரீ வைஷ்ணவ நெறியை உலகம் தழுவியதாக்கினார்.

திருமாலுக்கு அடிமை என்பதைக் காட்டிலும், இராமானுச தாசராய் விளங்குவதையே மரபின் உண்மை உணர்ந்தோர் பெரிதும் விரும்புவர்.

இராமானுஜர் அறிவுக்கூர்மை சங்கரரையும் மறுத்தது. அவரது வடிவழகு, கண்ணனையும் விஞ்சி.

**கையில் கனியென்னக் கண்ணனைக் காட்டித் தரிலும்**
**உந்தன் மெய்யில் பிறங்கிய சீரன்றி வேண்டிலன்யான்**

என்பார் அமுதனார்.

**எதிராசன் வடிவழகு எப்பொழுதும் என் இதயத்து உளதால்**
**இல்லை எனக்கு எதிர், இல்லை எனக்கு எதிர்**
**இல்லை எனக்கு எதிரே**

என இறுமாந்து உரைப்பார், இராமானுஜரின் இளவல் எம்பார்.

பாற்கடல் தொடங்கி பாரினில் கோயில் கொண்டுள்ள அனைத்து எம்பெருமான்களுமே இராமானுஜனின் இதயத்தில் உறைவதால்,

"இராமானுஜரே தெய்வம்" - நாம் எல்லோரும் கூடி பஜனை செய்வோம் என்று பாமர பக்தர்களையும் ஈர்த்து விட்ட பெருங்குணன் இராமானுசர்.

வேத சாஸ்திர நூல்களின் உட்கிடக்கையை உள்ளபடி ஸ்ரீ பாஷ்யம் போன்ற நூல்களில் வாதித்து வெளியிட்ட இராமானுஜர் வேதத்தின் அநுட்டானத்தையே தாமும் பின்பற்றி, இறைவனை அடைய சரணாகதியே வழி என்று எடுத்துக்காட்டி ஒரு பங்குனி உத்திரத் திருநாளில் தம்மைச் சார்ந்தார் அனைவருக்குமாகத் தாமே, அரங்கநாச்சியாரை முன்னிட்டு, அரங்கன் தாளில் தலை மடுத்து சரணாகதி செய்தார்.

தாம் ஒருவரே ஆசார்யர் என்ற சிறப்பு இருந்தும் தம் அடிபணிந்த சிஷ்யர்களையும் அவர்களது தகுதி பார்த்து மற்றும் பலருக்கு ஆசார்யர்களாக நியமித்து வைணவம் வளர்த்தார்.

ஞானம், பக்தி, வைராக்கியங்கள் நிறைந்து மொழியைக் கடக்கும் பெரும் புகழ் வாய்ந்த கூரத்தாழ்வான் போன்று பல பெரியோர்கள் இராமானுஜரை அடிபணிந்து உய்ந்தனர்.

ஸ்ரீ வைஷ்ணவ சமயத்தை ஒரு சிலருக்கின்றி சாதி, மொழி, இனம் நாடு கடந்து மக்களின் முழுமைக்கும் உரியதாக உயர்த்தி வளர்த்த பெருமை இராமானுஜருக்கே உரியது.

**பொருந்திய தேசும் பொறையும் திறலும் புகழும் நல்ல**
**திருந்திய ஞானமும் செல்வமும் சேரும் செறுகலியால்**
**வருந்திய ஞாலத்தை வண்மையினால் வந்தெடுத்தளித்த**
**அருந்தவன் - எங்களிராமானுசனை அடைபவர்கே**

**- அமுதனார்**

எம்பெருமானார் திருவடிகளே சரணம்!

ஸ்ரீமதே ராமாநுஜாய நம

# பகவத் ராமாநுஜர்

## முன்னுரை

மனித குலம் மறக்க முடியாத, மறைக்க இயலாத, மறுக்க வொண்ணாத மஹா புருஷன் ஒருவர் இம்மண்ணுலகில் தோன்றினார். சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் அவதரித்த பகவத் ராமாநுஜரை ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஒருநாளும் மறந்திலர், வைதிகர் மறைத்திலர், மற்றோர் மறுத்திலர்.

"மறையாய நால் வேதத்துள் நின்ற மலர்ச்சுடரை" ஆழ்வார்களின் அடியொற்றி அனைத்துலகும் துய்க்கும் வண்ணம் ஆக்கி வைத்த ஆசார்ய குலதிலகர் யதிராஜர்.

உடையவர் ஸ்ரீ பாஷ்யத்தால், நாரணனைக் காட்டிய வேதம் களிப்புற்றது. வாட்டமிலா வண்தமிழ் மறைநூல் "பொலிக பொலிக" என்று ராமாநுஜன் வரவு நோக்கி, நல் வாழ்த்துக் கூறியது. எம்பெருமானார் பிறப்பால் கலியும் கெடும் கண்டு கொண்மின் என்றார் நெடு நோக்குடன் நம்மாழ்வார்.

"மண்மிசை யோனிகள் தோறும் பிறந்து எங்கள் மாதவனே கண்ணுற நிற்கிலும் கணகில்லா உலகோர்கள் எல்லாம் அண்ணல் ராமாநுசன் தோன்றிய அப்பொழுதே நண்ணரு ஞானம் தலைக் கொண்டு நாராணற்கு ஆயினரே" எனச் சான்று பகர்கிறார், அண்ணலைக் கண்ணாரக் கண்டு உடனுறைந்த அமுதனார்.

அரங்கன் செல்வம் முற்றும் திருத்தி வைத்த உடையவரின் செய் நேர்த்தி கண்டு,

> **"ஸர்வதேச தசா காலேஷு அவ்யாஹத பராக்ரமா**
> **ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்"**

எக்காலத்தும் எவ்விடத்தும் எந்நிலையிலும் தோலாத வென்றியான் ஸ்ரீ இராமாநுஜர் இட்ட தெய்வீகக் கட்டளை நாளும் வளர்க: நன்கு பொலிக, என்று இன்றும் அடியார்கள் எங்கும் பல்லாண்டு பாடி வருகின்றனர்.

## திக்குற்ற கீர்த்தி

தமிழகத்தே, தொண்டைமண்டலச் சான்றோன் தோன்றினார். தலமுழுதும் கலியே ஆள்கின்ற நாளில் இருள் தருமா ஞாலத்தில், ராமாநுஜ திவாகரர் (சூரியன்) உதயமானார்.

சென்னை கடற்கரை ஓரத்தே, திருவல்லிக்கேணி பார்த்தசாரதிக்கும் மேற்கு காஞ்சீ பேரருளானுக்கும் வடக்கில் திருமலை அப்பனுக்கும் தெற்கில் கோவலூர் நாயனுக்கும் நடுவே - சத்திய விரத க்ஷேத்திரத்தில் அறம்மிகு நற் பெரும்பூதூரில் அவதரித்த புண்ணியன், தகுதி பார்த்து, அருள் புரியத் தயங்கி நிற்கும் பெருமான் அல்லன். தகவிலரையும் தக்கார் ஆக்கிக் கருணை பொழியும் எம்பெருமானார் ஆவர்.

பெருமான் புகழ்பாட ஆயிரம் நாப் படைத்த ஆதிசேஷனாலும் ஆகாது என்பர்; அவ்வனந்தனின் அவதாரமான எதிராசன் புகழ் பாடுவதெனில், அவ்வெம் பெருமானாலும் இயலாது எனலாம். அல்லாதன ஏற்றிச் சொல்லவோ, இருக்கின்ற புகழ் அனைத்தையும் எடுத்துக் கூறவோ முடியாத வாழ்க்கைச் சரிதம் அன்றோ எம்பெருமானாருடையது!

## எம்பெருமானார் தரிசனம்

அனாதியான ஸநாதன தர்மம் ஸ்ரீ வைஷ்ணவமே; இன்று "எம்பெருமானார் தரிசனம்" என்றே இதற்கு நம் பெருமாள் பேரிட்டு நாட்டி வைத்த பின் பேச்சேது. பிணக்கேது?

"பிணக்கற அறுவகைச் சமயமும் நெறி உள்ளி உரைத்த கணக்கறு நலத்தனன் அந்தமில் ஆதி அம்பகவன்" நமக்கு நல்கிய நற்செல்வனல்லவா இராமானுசன்.

ஸ்ரீ பாஷ்யகாரர், பிறர் தகையவொண்ணாத தத்துவதரிசி; மாசு மருவற்ற ஆத்ம குணச் செம்மல் பூரண ஞானப் பொலிவை புறத்தே பொசிந்து காட்டியும் வடிவழகர், மண்ணுலகில் சாதனை பல புரிந்த சரித்திரச் சான்றோன்; அன்பினால் பகைவென்ற அருஞ் செயல்வீரர்; பூவுலகில் வைகுந்தம் காட்டிய ஆசார்ய வித்தகர்; இறைவன் உறைவிடங்களைக் கட்டிக் காத்து வளர்த்த திறமை மிக்க அறங்காவலர்; எல்லாவற்றுக்கும் சிகரமாக மனிதாபிமானம் மிக்க ஸமுதாயவாதி. இத்தகைய அதீதமான பல்வகை ஆற்றலுடன் விளங்கிய, அவரை அவதார புருஷன் என்னத் தட்டில்லை.

நல்லார் பரவும் இராமாநுசனை, கற்றார் காமுறு சீலனைக் கண்டு மகிழ்ந்தோர் கணக்கில் அடங்கார் அண்டி உய்ந்தோர் அளவில் மிகுந்தார்; பாதம் பணிந்து பெற்றோர் பாரினில் சிறந்தார்.

## சரித்திரச் சான்று

காலம் கடந்து நிற்கவல்ல காவிய நாயகனுக்கு, கருத்துக் கருவூலத்துக்கு, "காலண்டர் தேதி" முக்கியமன்று; சரித்திரச் சான்றுகளும் ஒரு சரக்கன்று ஆயினும் அறிவாற்றலும் குறைவில்லை பத்தெட்டு ஆண்டுகள் முன்பின்னாகச் சொன்னாலும், "தமிழகத்துச் சோழன் குலோத்துங்கன் (கி.பி. 1070 முதல் 1118 வரை) முதல்வனோ, இரண்டாமவனோ, யாராயினும் ஆக, ராமாநுஜரை நலிந்து, நெஞ்சம் புழுத்து மாண்டாள்; "கிருமிகண்ட சோழன்", எனப் பெயர் பூண்டான் என்பது சரித்திரச் செய்தி, மக்களின் வாக்கு.

இராமாநுஜரின், மக்கள் இயக்கத்தை, ஆத்ம ஒளி வீசும் அறிவுமிக்க உயிர்க்குலத்தின் எழுச்சியை, அடக்குவதில் மன்னன் திருநீற்றுச் சோழன் முயற்சி வெற்றி காணவில்லை; மாறாகத் தமிழகம் மட்டுமின்றி மற்ற மாநிலங்களிலும் வைணவம், பற்றிப் பரவ அது வழி வகுத்தது. இனி அவரது சுவைமிக்க வரலாறு காண்போம்.

## அனந்தனின் அவதாரம்

ஸ்ரீ பெரும்பூதூரில் வேள்விச் சிறப்பு வாய்ந்த ஆசூரி கேசவருக்கு காந்திமதி தேவியிடம், சித்திரை திருவாதிரை நாளில் அவதரித்தார் இராமாநுஜர்.

**"கல்யபத்தே திவ்ய கும்பே புதஜன விதிதே**
**வத்ஸரே பிங்கலாக்யே**
**மாஸே சைத்ரே கதேஷு த்வியுத**
**தசதிநேஷ்வேதமாநே ஹிமாம்சௌ**
**பஞ்சம்யார்த்ராஸமேதே ஸுரகுரு திவஸே**
**கர்க்கடாக்யே ஸுலக்நே**
**ஸ்ரீமாந் ராமாநுஜார்ய ஸமஜநி**
**நிகமாந்தார்த்த ஸம்ரக்ஷணார்தம்"**

(ஸ்வஸ்தி ஸ்ரீ சென்ற கலி 4118க்குப் பிறகு நடக்கும் 4119 ஆவதான பிங்கள சித்திரை மாதம் 12ம் தேதி வியாழக்கிழமை (கி.பி.4.4.1017) சுக்ல பக்ஷ பஞ்சமி, திருவாதிரை நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் கர்க்கடக லக்னத்தில் வேதாந்தங்களை ரக்ஷிப்பதற்காக ஸ்ரீ ராமாநுஜர் அவதாரம் செய்தார்.)

இச்செய்தி கேட்டு வடவேங்கடம் திருமலையிலிருந்து காந்திமதியின் உடன் பிறந்தார், பெரிய திருமலை நம்பி, ஸ்ரீசைல பூர்ணர் என்பார், ஸ்ரீ பெரும்பூதூருக்கு வந்தார். பிறந்த குழந்தையின் தெய்வீகப் பொலிவுகண்டு வாழ்த்தி, "லக்ஷ்மணோ லக்ஷ்மீ ஸம்பந்ந:" (திருநிறைச் செல்வன் தெய்வமகன் இலக்குவன்) என்பதற்கு ஏற்ப "இளையாழ்வான்" என்று பெயர் சூட்டினார்.

**"அனந்த : பிரதமம் ரூபம் லக்ஷமணச்ச அத: பரம்**
**பலபத்ரஸ் த்ருதீயஸ்து கலௌ கச்சித் பவிஷ்யதி "**

என்பது ஆன்றோர் வாக்கு. திருமாலின் ஐம்படைகளின் (பஞ்சாயுதங்கள்) அவதாரம் என்பாரும் உண்டு. பெயர் வைத்த அவ்வம்மான் திருப்பதி திருமலையிலிருந்து வந்து மருமானுக்குப் பெயர் வைத்த திருமலை நம்பியோ, சாமான்யரல்லர்; அக்காலத்தே ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீ ஆளவந்தாரின் அருமைச் சிஷ்யர்களுள் ஒருவர்.

## குருகுலம்

நெடுநாள் பிள்ளைப் பேறின்றி ஸ்ரீ பார்த்தசாரதியை வேண்டிப் பெற்ற அவ்வருமைக் குழந்தைக்கு, தந்தை ஆசூரி கேசவர், உரிய காலத்தில் உபநயனாதிகளைச் செய்து அந்தணச் சிறுவன் பெறவேண்டிய தகுதிகளை அடைவித்தார். வேதம் ஓதி முடித்த இளைஞன் இளையாழ்வான் தத்துவ நாட்டத்துடன், காஞ்சிக்கு அருகே திருப்புட்குழி எனும் ஊரில் புகழ்பெற்ற ஆசிரியர் யாதவப் பிரகாசரிடம் வேதாந்தம் பயிலச் சென்றான்.

## திருமணம் (1033)

இராமாநுஜனின் தோற்றப் பொலிவும், புத்தி கூர்மையும் இன்மொழியும் யாதவரைப் பெரிதும் கவர்ந்தது; யாதவரிடம் தத்துவம் பயின்று வரும் போதே இராமாநுஜனுக்குத் தஞ்சமாம்பாளுடன் திருமணமாயிற்று. அப்போது இளையாழ்வாருக்கு வயது 18.

இராமாநுஜனின் சிற்றன்னை ஸ்ரீதேவி, திருமலை நம்பியின் மற்றொரு சகோதரி, ஸ்ரீ பெரும்பூதூர் அருகில் மழலை (மதுர) மங்கலத்து கமல நயன பட்டருக்கு ஸ்ரீதேவியிடம் பிறந்த பிள்ளை கோவிந்தன்; இராமாநுஜனுக்கு இளையவன். அவனும் யாதவரிடம் தத்துவப் பாடம் கேட்க அக்குருகுலத்தில் சேர்ந்தான். ராமாநுஜர் வயது அப்போது 18 (1035)

## தாமரைக் கண்ணன்

கற்கும் போதே, இயற்கைக்கு மாறான இறைவனுக்கு ஒவ்வாத கருத்துரைகளை மறுத்துரைக்க இராமாநுஜன் தயங்கியதே இல்லை.

குருகுலத்தில் ஒருநாள், மாணவன் இராமாநுஜன் ஆசிரியர் யாதவருக்கு எண்ணெய் தேய்த்துக் குற்றேவல் புரிந்து கொண்டிருந்தார். அப்போது மாணவர் சிலர், சாந்தோக்ய உபநிஷத் வாக்கியம் ஒன்றுக்குப் பொருள் கேட்டனர். "கப்யாஸம் புண்டரீகம் ஏவ மக்ஷிணி" என்னும் அவ்வாக்கியத்துக்கு, சங்கரர் கூறிய பொருளை யாதவப் பிரகாசர் எடுத்துக் காட்டிய போது இராமாநுஜரின் உள்ளம் கன்றியது; கண்ணினின்றும் நீர் கசிந்து, ஆசிரியர் துடையில் விழுந்து நெருப்பெனச் சுட்டது.

யாதவர் திகைத்துப் போனார். காரணம் வினவினார். கப்யாஸம் என்பதை கபி - ஆஸம் (குரங்கு - புட்டம்) எனப் பிரிப்பது பொருத்தமன்று; கம்-பிபதி - இதி - ஆஸ எனப் பிரித்து, "சூரிய மண்டலத்துள் உறையும் இறைவனின் கண், அக்கதிரவனால் அலர்த்தப் பெறும் நீரார் கமலம் போல்வன" என்பதே இவ்வாக்கியத்துக்குப் பொருந்திய பொருளாகும் என்றார் இராமாநுஜர்.

இதைக் கேட்ட யாதவருக்கும் இவ்வழகிய கருத்தை ஏற்க மனமில்லை. சினம் பொங்கி எழுந்து, "நாம் சொன்னபடி கேட்க இசைந்தால் இங்கு இரும்; இன்றேல் இன்றே எம்மைவிட்டுப் போய்விடும்" என்றார். எனினும் இராமாநுஜர் யாதவரைப் பிரியவில்லை.

## பிரஹ்ம ஸ்வரூபம்

அது போன்று மற்றொரு முறை தைத்திரிய உபநிஷத்தில் "ஸத்யம், ஞானம், அனந்தம், பிரஹ்ம" என்ற முக்கியமான வாக்கியத்துக்கு, அதிலுள்ள சொற்கள் அனைத்தும் பிரஹ்மம் ஒன்றையே பொருளாகக் கொண்டவை என்றார் யாதவர். அதைக் கேட்ட இராமாநுஜர், அதனைச் சிறிது மாற்றி, "அச்சொற்கள் பிரஹ்மத்தின் ஸ்வரூப இயல்பான குணங்களைச் சொல்வன" என்றார்.

ஒரே மலருக்கு, செம்மை, மென்மை, மணம், வடிவழகு, நிறை பல குணங்கள் இருக்கலாம். குணங்களின் இப்பன்மை, அவற்றையுடைய மலரின் ஒருமைக்கு முரண் அல்ல. அதுபோல் பல்வேறு பண்புகளுடைய பிரஹ்மம் ஒன்றே என்பதில் யாதொரு தட்டுமில்லை என்பது இராமாநுஜரின் விளக்கம்.

இராமானுஜரின் அறிவுக் கூர்மை, ரஸிக உள்ளம், நாவன்மை யாதவரின் மனத்தில் புயலை எழுப்பியது. முன்னோர் பலரது வரட்டுத் தத்துவ வாதங்கள் இவரது வனப்பு வேதாந்த விளக்கங்களால் தவிடு பொடியாகிவிடும் என்று யூகித்தார் குரு.

"இராமானுஜரின் கண் பார்வை தீக்ஷண்யம் நிறைந்த ஞானப் பார்வை, பார்த்தான் அறு சமயங்கள் பதைப்பர்", என்கிறார் அமுதனார். அக்கண்ணிலிருந்து வழிந்த நீர் யாதவரின் தொடையைச் சுட்டதில் வியப்பில்லையே.

பதினேழாம் வயதில் இளையாழ்வாரின் தந்தை கேசவ சோமாயாஜி (1034ல்) பரமபதம் எய்தினார். 18 ஆம் வயதில் காஞ்சியில் குடியேறினார்.

## குருவின் சதி

இளையாழ்வாரின் இருப்பே யாதவருக்கு சகிக்கவில்லை. எரிச்சல் ஊட்டியது. தமது வரட்டுத் தத்துவ வாதங்களைக் காக்க, இராமானுஜரைத் தீர்த்து கட்டுவது ஒன்றே வழி என்ற தீர்மானத்துக்கு வந்தார் குரு.

"காசி யாத்திரை" என்று பேரிட்டு, புனித கங்கையில் இப்பொல்லாத இராமானுஜரை அழுத்திக் கொல்வது என்பது யாதவரின் சதித்திட்டம். இராமானுஜரிடம் போலி அன்பைப் பொழிந்து, காசி யாத்திரைக்கு அழைத்தார். தந்தையை இழந்த இராமானுஜர் தாயின் அனுமதி பெற்று, மாணவர் பலரோடு யாதவருடன் யாத்திரை சென்றார். அவரது தம்பி கோவிந்தனும் உடன் வந்தார் (1036).

வழியில் யாதவரின் அணுக்கச் சிஷ்யர்களின் நெருங்கிய பழக்கத்தால் குருவின் அந்தரங்க நோக்கம் கோவிந்தனுக்குப் புலனாகி விட்டது. தமையனுக்கு நேரவிருக்கும் கதியை எண்ணி, கோவிந்தன் நெஞ்சு கலங்கினார். எப்படியும் இராமானுஜர் தப்பவழி தேடி வாய்ப்பை நோக்கினார்.

## கோவிந்தன் உதவி

எழுநூறு மைல் பயணமான போது வழியில் விந்திய மலைச்சாரலில் ஒருநாள் அதிகாலையில் இராமானுஜர் எழுந்து காலைக்கடன்களை முடிக்க, காட்டிலிருந்த பொய்கைக்குத் தனியே சென்றார். கோவிந்தன் அவ்வாய்ப்பைப் பயன்படுத்தி யாதவரின் சதித்திட்டத்தைக் கூறி, "இப்போதே தப்பிவிடும்" என்றார்.

விந்தியத்தின் அக்காட்டுச் சோலையில் கோவிந்தனைப் பிரிந்து இராமானுஜர் தனிவழி சென்று மறைந்தார். குருவும், சிஷ்யர்களும்

இராமாநுஜரைத் தேடிக் கவலையுற்றனர். கோவிந்தன் மௌனமாகிவிட்டார். யாதவப் பிரகாசர் ''ஐயோ பாவம்! எந்தக் காட்டு விலங்கோ இராமாநுஜனை அடித்துக் கொன்றிருக்க வேண்டும். என் செய்வது? விதியை வெல்வது யாரால் முடியும்'' என்று கோவிந்தனுக்கு ஆறுதல் கூறி, தானும் ஒருவாறு திருப்தி அடைந்தார்.

''நான் விரும்பியபடி கங்கைக் கழுவி செத்தால் என்ன? விதி கருதியபடி கரடித் தழுவி மாண்டால் என்ன? எப்படியோ என் எண்ணம் ஈடேறினால் சரி'', என்று தன் காசி யாத்திரையை மேலே தொடர்ந்தார் குரு.

## காட்டுப் பயணம்

அடர்ந்த விந்திய காட்டில் தனிப்பிரிந்து விட்ட இராமாநுஜரோ வழி தெரியாமல், கேட்பதற்கும் ஆள் இன்றித் தட்டித் தடுமாறி நல்வழி கிட்டும் என்ற குருட்டு நம்பிக்கையில் கால் போன போக்கில் வழி நடந்தார். பதினெட்டு பிராயத்தவர் பகல் முழுவதும் உணவின்றி நடந்து களைத்து விட்டார். இராப் பொழுதை கழிப்பதைப் பற்றி கவலையுற்றார். வேத ஆராய்ச்சியும், காட்டுப் பயணமும் ஒரே விதமானவையே என்று அவர் திருவுள்ளத்தில் தோன்றியிருக்கலாம்.

அப்போது ஒரு வேடன் மனையாளுடன் வில்லேந்தி அவ்வழி வந்தான்.

''கொடிய விலங்குகளும், கொலை பாதகக் கொள்ளையரும் நிறைந்த இவ்விடத்தில் வழி தவறி வந்துள்ள நீ யார்? உன் ஊர் எது? எங்கே போகிறாய்'' என்று பரிவுடன் கேட்டான் அந்த வில்லி.

''நான் காஞ்சிபுரம் போக வேண்டியவன்; வழி தவறி வந்துவிட்டேன்'' என்று விடைக் கூறி, ''நீங்கள் யார்? எங்கே போகிறீர்கள்?'' என்று வேட தம்பதியரை வினவினார் இராமாநுஜர்.

''நாங்கள் வட தேசத்தவர்: சத்திய விரத க்ஷேத்திரம் செல்கின்றோம்; எங்களுடன் வா, வழிகாட்டுகிறோம்'' என்றான் வேடன்.

அந்த இரவை இராமாநுஜர் வேடனோடு, காய் கனிகளை உண்டு கழித்தார். மறுநாள் காலை அவர்களுடன் நடையை தொடர்ந்தார். அப்போது அந்நாளில் தண்டக்காரண்யத்தில் இராமன், காலில் பரல்பாய வழி நடந்தது இராமாநுஜரின் நினைவில் நிழலிட்டது.

## காஞ்சி மீண்டார்

நடுவழியில் இருட்டியது. வேடத் தம்பதியர் இராமாநுஜருக்குத் தனி இடம் அமைத்துக் கொடுத்து அருகில் தாமும் உறங்கினர். இரவு வேடன்

மனைவி, தண்ணீர் தாகத்தால் வருந்தி, கணவனை எழுப்பி அருந்துவதற்கு நீர் கேட்டாள். அருகே ஒரு கிணறு இருப்பதாயும் இரவில் செல்லக் கூடாது, காலையில் அருந்தலாம், படுத்துறங்கு என்று சொல்லிவிட்டான். இராமாநுஜரின் செவியில் இச்சொல் விழுந்தது. மறுநாள் பொழுது புலரு முன்னதாகவே, படுக்கையை விட்டெழுந்து முதல் வேலையாக வேடன் குறிப்பிட்ட கிணற்றைத் தேடி நீர் கொணர்ந்தார்.

ஆனால் வேட தம்பதியரை அங்குக் காணவில்லை சென்ற சுவடு கூட தெரியவில்லை, பொழுது நன்கு விடிந்து இருள் நீங்கியதும் தாம் இருப்பது காஞ்சியின் ஒரு பகுதியே என அறிந்தார் இளையாழ்வார்.

பலநூறு மைல்களை உறங்கிய வண்ணம் ஒரே இரவில், எப்படி கடந்தோம்? புரியவில்லையே! என்று திகைத்தார் இராமாநுஜர். அருட்செயல் ஆராய்ச்சிக்கு அப்பாற்பட்டதல்லவா?

வழிகாட்டி உதவிய அத்தம்பதியர் பற்றிய நினைவுடன் வீடு திரும்பினார் இராமாநுஜர். தாகவிடாய் தீராமலே சென்ற வேடுவச்சியின் நினைவு அவர் நெஞ்சில் நிலைத்திருந்தது.

காசி சென்ற பிள்ளை கடிதில் களைப்புடன் வீடு திரும்பியது கண்டு அன்னை காந்திமதி திடுக்கிட்டு "ஏன் இப்படி" என்று வினவினாள் நடந்தைவை எல்லாம் சொன்னார் இராமாநுஜர். அப்போது அவரது சிற்றன்னை ஸ்ரீதேவி, இராமாநுஜரின் மனைவி தஞ்சமாம்பாளுடன் அங்கு வந்து கோவிந்தனைப் பற்றியும், அவர் உதவியால் இராமாநுஜர் உயிர் தப்பியதையும் கேட்டறிந்து மகிழ்ந்தாள்.

தன் அருமைப் புதல்வன் உயிர் மீண்டதில் ஆறுதல் பெற்ற காந்திமதி, ஸ்ரீ வரதராஜன் சன்னிதி கைங்கர்யத்தில் ஈடுபட்டிருந்த திருக்கச்சி நம்பியை அழைத்து வந்து, அவரிடம் இராமாநுஜரை காத்தருளும்படி ஒப்படைத்தார். யாதவரின் சதிச்செயல் குறித்து இராமாநுஜர் எண்ணிப் பார்க்கவும் இல்லை, மற்ற யாரிடமும் வெளியிடவுமில்லை, அதனை மறந்து, மறைத்து விட்டார். குருவின் கண்ணியத்தைக் குலைக்காமல் காத்தார்.

## உள்ளங்கைக் கொணர்ந்த நாயனார்

மூன்று மாதங்களில் யாதவர் காசி யாத்திரையை முடித்துக் கொண்டு ஊர் திரும்பினார். அவருடன் ஆவலுடன் எதிர்பார்த்த கோவிந்தன் மட்டும் திரும்பவில்லை. காரணம் கேட்ட போது, கிடைத்த செய்தி இதுதான்.

கங்கையில் நீராடிய போது கோவிந்தனின் கையில் ஒரு லிங்கம் கிடைத்தது. அதை வைத்துக் கொண்டு செய்வதறியாமல் திகைத்தார் இளைஞர். "கோவிந்தப்பட்டரே, நீர் பாக்கியசாலி! கங்கை ஆடிய பயன் கைமேல் கூடிற்று, நீர் இனி உள்ளங்கை கொணர்ந்த நாயனார் ஆயினீர்" என்று யாதவர் அவரைப் போற்றிப் புகழ்ந்தார். ஊர் திரும்புகையில், "காளஹஸ்தியில் தனியிடத்துச் சோலையில் அந்த லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து, பூசித்து வாரும்" என்று குரு ஆணையிட்டார்.

கோவிந்தரும், தெய்வச் செயலுக்கு சம்மதித்து, செய்தியைப் பெற்றோருக்கு அறிவிக்குமாறு கூறி, காளஹஸ்தியில் தங்கி விட்டார்.

இராமாநுஜர் உயிர் தப்பி, காஞ்சி மீண்ட செயல் யாதவருக்கு ஏமாற்றமளிதாலும், கோவிந்தர் சைவரானது அவருக்குச் சிறிது ஆறுதல் அளித்தது. பகையை மறந்து, இராமாநுஜரிடம் பரிவை வெளிக்காட்டினார் யாதவர்.

காட்டில் மீண்டு வந்த விவரம் கேட்டறிந்தார் குரு: தம்மிடம் பழையபடி வேதாந்த பாடம் கற்குமாறு பணித்தார்.

## கச்சி நம்பி

திருக்கச்சி நம்பி, பூவிருந்தவல்லியில் பிறந்த வைசியர். ஆளவந்தாரின் சிஷ்யர், காஞ்சி வரதராஜனிடம் அளவற்ற அன்புடன் ஆலவட்ட (விசிறி) கைங்கர்யம் செய்து வந்தார். இறைவனோடு எப்போதும் தனித்து நெருங்கியிருந்ததால் அந்தரங்கத்தில் அருளாளனுடன் அளவளாவினார். வரதனோடு பேசுபவர் என்று உணர்ந்து பலரும் அவரை மதித்துப் போற்றினர்.

திருக்கச்சி நம்பியின் தொடர்பால் இராமாநுஜர் பகவத் கைங்கர்யச் சுவையைக் கண்டார். யாதவப் பிரகாசரின் பிடியிலிருந்து முற்றிலும் விடுபடாத நிலையில் காஞ்சி பூரணர் எனும் கச்சி நம்பியையும் பின் தொடர்ந்தார் இராமாநுஜர்.

குருவை விஞ்சிய கூரிய ஞானஸ்தர் இராமாநுஜர் எனும் புகழ் அக்கம் பக்கங்களில் பரவியிருந்தது. பூவிருந்தவல்லியை அடுத்த பச்சை வாரணப் பெருமாள் கோயில் என்னும் தலத்தில் இராமாநுஜரின் சகோதரிக்கு, தாசரதி என்ற ஒரு மைந்தர் இருந்தார். அவர் இராமாநுஜரின் சிறப்புக்களைக் கேட்டு அவரைக் கிட்டிப் பழகினார்.

அதே போன்று காஞ்சீபுரத்துக்கு அருகில் கூரம் என்னும் ஊரில் செல்வச் சீமானாய் வாழ்ந்து வந்த ஸ்ரீவத்ஸாங்கர் என்னும் ஆழ்வானும் இராமாநுஜரின் கூரிய ஞானச் சிறப்பில் கருத்தைச் செலுத்தினார்.

## ஆளவந்தார் அருள்நோக்கு (1037)

ஸ்ரீரங்கத்திலிருந்து அருளாளனைத் தரிசிக்க நாத முனிகளின் பேரனும், ஸ்ரீ வைஷ்ணவ உலகின் பரமாச்சார்யராக விளங்கியவருமான யாமுனமுனி என்னும் ஆளவந்தார் அந்நாளில் காஞ்சிக்கு எழுந்தருளினார். அவர் இராமாநுஜரைப் பற்றி கச்சி நம்பி மூலம் எல்லா விவரங்களையும் கேள்வியுற்றிந்தார் ஞனப் பொலிவும் வடிவழகும் ஆத்ம குணங்களும், சொல்திறனும் நிறைந்த இராமாநுஜரை நேரில் காணவும் ஆவலுற்றார்.

கோயிலில் யாதவப் பிரகாசர் தம் சிஷ்யர்களோடு வரதனை சேவித்து வலம் வந்து கொண்டிருந்தார். அப்போது ஆளவந்தாருடன் அங்கு வந்த கச்சி நம்பி, இராமாநுஜரைச் சுட்டிக்காட்டி “அவர் தான் யாதவரின் பிடியில் இருப்பினும் தாமரைக்கண்ணன் விண்ணோர் நாயகன் என்னும் வேதாந்த விழுப் பொருளை இயற்கையாகவே நன்கு உணர்ந்துள்ள எழில் உருவன்” என்று கூறினார்.

ஆளவந்தாரும் இராமாநுஜரைக் குளிர நோக்கி உளம் உவந்து வாழ்த்தி **“ஆம் முதல்வன் இவன்”** என்று எதிர்காலத்தில் நம் தரிசன நிர்வாகத்துக்கு இவரே ஏற்றவர் என அறுதியிட்டு, கச்சி நம்பியிடம் விடை கொண்டு ஸ்ரீரங்கம் விரைந்தார்.

## பேய் விலகியது

அது போழ்து நடந்த நிகழ்ச்சியொன்று யாதவர் பிடியிலிருந்து இராமாநுஜர் விடுபட வழி வகுத்தது.

காஞ்சி நகர்ப் பகுதியை ஆண்ட சோழச் சிற்றரசன் மகளை பிரம்மராக்ஷஸ் (முனி) பிடித்து ஆட்டியது. ஊரெல்லாம் இதைப் பற்றியே பேச்சு. யாதவப் பிரகாசருக்கு மந்திர தந்திரம் தெரியும். அந்தப் பெண்ணைப் பிடித்த பிசாசை ஓட்டுவதாகக் கூறி, அவர் தன் புகழைப் பரப்ப எண்ணினார். அரண்மனைக்கு விரைந்தார். அவருடன் இராமாநுஜரையும் அழைத்துச் சென்றார். பேய் பிடித்த பெண் யாதவரின் மந்திர தந்திரங்களுக்கு மசியவில்லை. அருகில் இருந்த இராமாநுஜரின் தோற்றப் பொலிவையும் முறுவல் முக ஒளியையும் கண்டு பொருள் நிறைந்த இனிய சொல் கேட்டு, மனத் தெளிவுற்றாள்; அவரது அடி பணிந்து நின்றாள். அவர்

சொல்படி கேட்டு நடந்தாள். முடிவில் பேய் விலகி பெண் முற்றும் தெளிந்தாள்.

அரசன் இராமாநுஜரிடம் மகிழ்ச்சியும், நன்றியுணர்வும் நன்மதிப்பும் கொண்டு அவரை கவுரவிக்க முற்பட்டான். இதனால் யாதவர் வெகுண்டு இராமாநுஜர் உறவே அறவே வெறுத்தார்.

யாதவர் தொடர்பை அறவே விட்டு, கச்சி நம்பியுடன் பகவத் கைங்கர்யத்தில் முற்றிலும் ஈடுபடுமாறு பிள்ளைக்கு இராமாநுஜரின் தாயும் கட்டளையிட்டாள் (1038)

## சாலைக்கிணறு தீர்த்தம்

தாம் உயிர் தப்பி மீளுகையில், காட்டில் வில்லும் கையுமாய் மனையாளுடன் வந்து வழி காட்டியவர் சாமானிய வேடராய் இருத்தல் கூடுமோ என்று இராமாநுஜர் யோசிக்கலானார். லக்ஷ்மணனின் அம்சமான அவருக்கு உள் உணர்வு தண்டகாரண்ய ராமனையே நினைவூட்டியது. அவ்வெம்பெருமானுக்கு "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்" என்ற பாரிப்பு ஏற்பட்டது. சீதை போன்று விளங்கிய அவ்வேடுவச்சி தாகம் தீரப் பெறாமலே சென்றதும் இராமாநுஜர் நெஞ்சை உறுத்தியது. உடனே பெருந்தேவித் தாயார் - பேரருளாளன் அவரது நினைவில் வந்து நின்றனர். வேடன் குறித்த அந்தக் கிணறு காஞ்சிப் பகுதியில், புகழ் பெற்ற சாலைக் கிணறுதான். அதிலிருந்து இராமாநுஜர் தினமும் குடம் நிறையத் தீர்த்தம் எடுத்துச் சென்று, வரதராஜர் கோவில் திருமஞ்சனத்துக்குக் கொடுத்து வந்தார்.

## ஆளவந்தார் அழைப்பு

"யாதவப்பிரகாசரிடமிருந்து விலகி இராமாநுஜர் கச்சி நம்பியுடன் கோவில் கைங்கர்யத்தில் ஈடுபட்டுள்ளார்" என்ற செய்தி, பருவத்தாலும், ஞான பக்தி வைராக்யங்களாலும் பழுத்து உதிரும் நிலையிலிருந்த ஆளவந்தாருக்கு ஸ்ரீரங்கத்தில் எட்டியது. உடனே அவர் தம் சிஷ்யர்களுள் ஒருவரான பெரிய நம்பியை காஞ்சிக்கு அனுப்பி, இராமாநுஜரைக் கையோடு அழைத்து வருமாறு பணித்தார்.

பெரிய நம்பி சில நாட்களில் ஸ்ரீரங்கத்திலிருந்து நடந்தும், ஓடோடியும் காஞ்சிக்கு வந்து கச்சி நம்பி அகத்தில் தங்கியபோது, இராமாநுஜர் சாலைக்கிணறு தீர்த்தத்துடன் வரதன் ஸந்நிதிக்குச் சென்று கொண்டிருந்தார். அவரைக் கண்ட பெரிய நம்பி ஸ்ரீ ஆளவந்தார்

இயற்றிய அற்புதமான துதிகளால் ஆன "ஸ்தோத்திர ரத்னத்தை" இராமாநுஜர் செவியில் ஒலிக்கும்படி உரத்த குரலில் கூறிக் கொண்டே அவரை அணுகினார்.

சொல்நயம், பொருட்செறிவு, தத்துவச் சிறப்பு எல்லாம் வாய்ந்து, வாய் மணக்க, நெஞ்சு இனிக்க, ஆவி குளிர அமைந்து இறைவன் புகழ்பாடும் அந்த அற்புத ஸ்தோத்திரத்தை அருளிச் செய்த மஹான் யாரோ? எனக் கேட்டார் இராமாநுஜர்.

"ஸ்ரீ வைஷ்ணவ உலகின் பரமாசாரியரும் அடியேனின் ஆசார்யருமான ஸ்ரீ ஆளவந்தார் அருளியது" என்று பதில் கூறினார் மஹா பூர்ணர் என்னும் பெரிய நம்பி.

இராமாநுஜர் உள்ளம் துள்ளி எழுந்தது. அத்தகைய நூல் இயற்றிய ஆசார்யனை இப்போதே கண்டு உய்வு பெற வேண்டும் என்று பாரித்தார். அவர் நிலை கண்டு நம்பியும், "ஸ்ரீ ஆளவந்தார் நியமனத்தாலேயே அடியேன் இங்கு உம்மைத் தேடி வந்துள்ளேன். பரமாசாரியர் உம்மை உடனே அழைத்து வரச் சொல்லிப் பணித்தார், புறப்படும்" என்றார்.

திருமஞ்சனத் தீர்த்தத்தைக் கோவிலில் சேர்த்து விட்டு வரும் வரை காத்திருக்க வேண்டினார் இளையாழ்வார். பெரிய நம்பியும் தமது சக மாணவர் திருக்கச்சி நம்பியிடம் விடை பெற்று ஸ்ரீ இராமாநுஜரை அழைத்துக் கொண்டு உடனே திருவரங்கம் பெரிய கோயில் நோக்கி விரைந்தார். நாலு நாள் இரவு பகலாக வழி நடந்து காவிரிக்கரை அடைந்த போது இவர்களைக் கண்டசிலர் "ஸ்ரீ ஆளவந்தார் திருநாடு அலங்கரித்தார்" என்று சேதி சொல்லினார்.

## மூன்று குறைகள்

ஸ்ரீ ஆளவந்தார் திருமேனியை அவரது சிறப்புக்கு ஏற்பப் பள்ளிப்படுத்தும் பணி ஸ்ரீரங்கத்தில் வெகு விதரணையாக நடைபெற்றது. ஆளவந்தாரின் திருமேனி தரிசனமாவது தமக்குக் கிட்டியதே என அவரைச் சுற்றி வலம் வந்து ஆதுரத்துடன் நோக்கினார். அப்போது யாமுனரின் கை விரல்களில் மூன்று மடங்கியிருந்தன. "இது புதுமையாய் இருக்கிறது" என்றனர் அருகிலிருந்தோர். அப்படியாயின் ஸ்வாமியின் திருவுள்ளத்தில் ஏதேனும் குறையிருத்தல் வேண்டும். அவை யாதாயிருக்கலாம் என்று தக்கோரை வினவினார் இராமாநுஜர். அருகிலிருந்த அணுக்கச் சீடர்கள் கூறினர்.

ஸ்ரீ ஆளவந்தாருக்கு நன்றியுணர்வு அதிகம்

1. வியாச பராசரர் இந்த தரிசனத்துக்குச் செய்துள்ள மஹோ பாகாரத்துக்கு நினைவாக அந்த ரிஷிகளின் பெயரையாவது நமது பிள்ளைகளில் தக்கவருக்குச் சூட்டி அழைக்க வேண்டும் என்பது ஒன்று.

2. அடுத்து நம்மாழ்வாரிடம் அளவற்ற பக்தி கொண்டவர் ஆளவந்தார். மயர்வற மதிநலம் அருளப் பெற்றவரின் திருவாய்மொழிக்குத் தக்க உரை காண வேண்டும்.

3. மூன்றாவதும் முக்கியமானதுமான அவரது ஆசை வியாசரின் பிரம்ம சூத்திரத்துக்கு விசிஷ்டாத்வைத பரமான பாஷ்யம் இயற்ற வேண்டும் என்பது.

இம்மூன்றுமே அவர் எண்ணியிருந்த குறைகள் என்றனர். இக்குறையைக் கேட்ட இராமாநுஜர் அடியேனுக்கு உடம்பும் திடமாயிருந்து ஆசார்ய அனுக்கிரஹமும், பகவத் க்ருபையும் இருக்குமானால், பரமாசாரியரின் இந்த மூன்று குறைகளையும் அடியேன் வாழ்நாளிலேயே நிறைவேற்றி வைக்கிறேன் என்று உறுதி கூறினார்.

ஆளவந்தாரைச் சேவித்து அவர் அருளை நேரில் பெறலாம் எனப் பாரித்துக் கொண்டு வந்த இராமாநுஜருக்கு ஏமாற்றம் ஏற்பட்டதால் அரங்கனைக் கூடச் சேவிக்காமல் காஞ்சிக்குத் திரும்ப பெரிய நம்பியிடம் விடை கொண்டார் (1038).

## எதிர்காலத் திட்டம்

காஞ்சிக்குத் திரும்பிய இராமாநுஜருக்குத் தெளிவாக மூன்று கடமைகள் முன்னே நின்றன.

ஆளவந்தாருக்குப் பின் ஸ்ரீ வைஷ்ணவ உலகின் தலைமைப் பொறுப்பு தமக்காகக் காத்து நிற்கிறது என்ற உணர்வு அவருக்கு ஏற்பட்டது. அதற்குத் தம்மைத் தகுதியுடையவராகச் செய்து கொள்வதில் அவர் முனைந்தார். அந்த முனைப்பு அவரது நெஞ்சில் புயல் எழுப்பியது. குழம்பி நின்ற இராமாநுஜர் தெளிவுக்காக இறைவன் கட்டளையை எதிர்நோக்கினார்; திருக்கச்சி நம்பியின் உதவியை நாடினார்.

கச்சிநம்பியை ஆசார்யராக வரித்து, பஞ்ச சம்ஸ்காரங்களைப் பெற்று, ஆத்ம யாத்திரையைத் தொடங்க வேண்டும் என்று எண்ணினார். அதையொட்டி திருக்கச்சி நம்பியைத் தம் இல்லத்தில் அமுது செய்ய (உணவருந்த) எழுந்தருள வேண்டினார். அவரும் இசைந்தார்.

மனைவி தஞ்சமாம்பாளிடம் கச்சி நம்பிக்கு, உணவு தயாரிக்கச் சொல்லி அவர் உண்டபின் மிச்சமுள்ளதைத் தாம் அருந்தி, தூய்மை பெற விழைந்தார். "போனகம் செய்த சேடம் தருவரேல் புனித மன்றே" என்னும் அருளிச் செயல்படி நடக்க எண்ணினார்.

குறிப்பிட்டபடி தஞ்சமாம்பாள் உணவு தயாரித்து விட்டு "இன்னும் அவரைக் காணவில்லையே" என்றாள் கணவரிடம். நானே போய் அழைத்து வருகிறேன் என்று கூறி, கச்சி நம்பியைத் தேடி கோயிலை வலமாகச் சுற்றிச் சென்றார். குறித்த காலத்தில் இராமாநுஜர் இல்லம் ஏக வேண்டும் என்பதற்காக கைங்கர்யத்தை இடையில் நிறுத்தி, கச்சி நம்பியும் வேறொரு வீதி வழியாக வலம் வந்து இராமாநுஜரின் அகத்தை அடைந்தார்.

வந்தவர் "அம்மணீ! அடியேன் பகவத் கைங்கர்யத்தை இடையில் நிறுத்தி வந்தேன். விரைந்து, பிரசாதம் பரிமாற வேணும்" என்று பரிவுடன் வேண்டினார்.

இராமாநுஜரின் மனைவியும், கணவர் வரவுக்குக் காத்திராமல் இடைகழியில் இலையிட்டு, நம்பிக்கு உணவு பரிமாறி, அவர் சாப்பிட்டதும் விரைந்து, எச்சிலை அகற்றி, சாணம் இட்டு தரை மெழுகி ஸ்நானமும் செய்யப் புகுந்தாள்.

திருக்கச்சி நம்பியைத் தேடிச் சென்ற இராமாநுஜர் கோயில் எங்கும் தேடிக் காணாமல் அலைந்து, வீடு திரும்பும் போது, வேறு வீதி வழியாக, கச்சிநம்பியும் கோயிலுக்குள் சென்று விட்டார்.

வீடு திரும்பிய இராமாநுஜர் தீர்த்தமாடி நிற்கும் மனைவியை விவரம் வினவினார். நடந்ததைச் சொல்லி மேலே வீட்டைக் கழுவி, புதியது சமைக்க முற்பட்டாள்.

இராமாநுஜருக்குப் பொங்கி வந்தது சீற்றம். ஆளவந்தார் அருள் வேண்டி ஸ்ரீரங்கம் சென்றபோது ஏற்பட்ட ஏமாற்றம், அதைத் தொடர்ந்து அவரது அடியார் "சேஷம்" பெற ஆசைப்பட்டு அதுவும் கிட்டாத ஏமாற்றம் எல்லாம் சேர்ந்தது. ஆயினும் ஒருவாறு கோபத்தை அடக்கிக் கொண்டு, "பரம பாகவதரை ஆராதிக்கும் முறை இதுதானா?" என்று மனைவியை வினவினார்.

"நான் தவறு ஏதும் செய்யவில்லையே, சாதிக்குத் தக்க ஆசாரத்தோடு தான் நடந்து கொண்டேன்" என்று வாதாடினாள் மனைவி. "பெருமாளிடம் பேசும் பாகவதோத்தமருக்குச் சாதி ஏது? சாதிக்கென தனி நீதி ஏது?" என்று

கடிந்து ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு, பாகவத அபசாரத்துக்குப் பரிகாரம் தேட நம்பியிடம் ஓடினார்; காலில் விழுந்து மன்றாடினார்.

இராமாநுஜரின் மனோநிலை கண்ட கச்சிநம்பி அவரைப் பலபடியாக ஆறுதல் கூறித் தேற்றினார். ஆயினும் இளையாழ்வார் தெளியவில்லை. அப்போது இராமாநுஜரின் வயது 22 (1039)

## அருளாளன் ஆறு வார்த்தை

பெருமாளுடன் பேசும் அருள் பெற்ற கச்சிநம்பியிடம் தாம் கேட்டுத் தெளிய வேண்டிய ஆறு விஷயங்கள் உள்ளன என்று இராமாநுஜர் கூறினார். அந்த ஆறு விஷயங்களை குறித்து அருளாளன் தீர்ப்பைக் கேட்டுத் தெரிவிக்க வேண்டுமென்று கச்சி நம்பியை வேண்டினார். அவரும் சம்மதித்தார். மறுநாள் இராமாநுஜரிடம் உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டிய கொள்கைகளாக வெளியிட்டவை இவை:

1. **அஹமேவ பரம் தத்வம்** : நானே (அருளாளன் - திருமாலே) முழு முதற்கடவுள்.
2. **தர்சனம் பேதயேவச** : ஜீவாத்மாக்களினின்று பரமாத்மா வேறுபட்டவனே.
3. **உபாயேஷு ப்ரபத்தி ஸ்யாத்** : இறைவனை அடையும் முக்திநெறி சரணாகதியே
4. **அந்திம ஸ்மிருதி வர்ஜனம்** : இறைவனடி சேர்ந்தார்க்கு மரணகால நினைவு பற்றிய கவலை வேண்டாம்.
5. **சரீர அவஸாநே முக்தி:** உடல் சாய்ந்த பிறகே மனிதருக்கு முக்தி.
6. **மஹாபூர்ண ஸமாச்ரயணம்** : (பெரிய நம்பியை ஆசார்யராகப் பற்றுவது).

இந்த ஆறு வார்த்தைகளும் இராமாநுஜரின் கொள்கைகளையும் வாழ்க்கை நெறிகளையும் திட்டவட்டமாகத் தெளிவுபடுத்திவிட்டன.

அருளானிடம் ஆறு வார்த்தைகள் பெற்றுவிட்ட இராமாநுஜரின் புகழ் அகிலமெங்கும் பரவியது. மருமகன் தாசரதி.

கூரத்து ஆழ்வான் முதலானோர் இதனைக் கேள்வியுற்று, விரைந்து வந்து இராமாநுஜரைப் பற்றிக் கொண்டனர்.

## ஆசாரியன் கை புகுந்தார்

இராமாநுஜரோ, முதற் காரியமாக அருளாளன் கட்டளைப்படி பெரிய நம்பியை ஆசார்யனாக ஏற்று, பஞ்ச சம்ஸ்காரங்களை அவரிடம் பெற ஸ்ரீரங்கம் நோக்கிப் புறப்பட்டார்.

இப்படிப் புறப்பட்ட இருவரும் வழியில் மதுராந்தகத்தில் எதிர்கொண்டனர். தண்டனிட்ட இராமாநுஜரை வாரி அணைத்து எடுத்து வாழ்த்தினார் பெரிய நம்பி. கருணாகரப் பெருமாள் (இப்போது ஏரிகாத்த ராமன் என்பர்) ஸந்நிதியில் இளைப்பாறினார் இருவரும். எண்ணிய பயன் எதிர்பட்டது; எல்லாம் இறைவன் செயல்! என மகிழ்ந்தனர்.

"அடியேனுக்கு இப்போதே மந்திர உபதேசம் செய்தருள வேணும்" என்று வேண்டினார் இராமாநுஜர்.

"ஆக்கப் பொறுத்தவர் ஆறப் பொறுக்கலாகாதோ? வாரீர்; அத்திகிரி அருளாளன் ஸந்நிதியில் வைத்துக் கொள்ளலாம் உபதேசத்தை" என்றார் நம்பி.

"மின்னின் நிலையில் மன்னுயிர் ஆக்கை", நீரில் குமிழியன்றோ இவ்வுடல், நற்கதிக்கு வழி இப்போதே நல்க வேண்டும் என்று இராமாநுஜர் துடி துடித்து மடிபிடித்தார்.

அவர் பாரிப்பு கண்டு, அதிகார பூர்த்தி கொண்டு அப்போதே பெருமாள் சந்நிதி பிரகாரத்தில் மகிழ மரத்தடியில் அமர்த்தி, அவருக்கு பஞ்ச சம்ஸ்காரங்களைச் செய்தார் பெரிய நம்பி.

## பஞ்ச சம்ஸ்காரம்

1. தீயில் பொலிகின்ற செஞ்சுடர் ஆழி திகழ் திருச் சக்கரத்தின் கோயிற்பொறியாலே ஒத்துண்டு நிற்கை **தாப ஸம்ஸ்காரம்** அதாவது வலத்தோளில் சக்கரமும் இடத்தோளில் சங்கும் தரிப்பது.

2. நெற்றி, நாபி, மார்பு, இரு தோள்கள், பிடரி, பின் இடுப்பு ஆகிய உடலின் பாகங்களில் கேசவ, நாராயண, மாதவ, கோவிந்த, விஷ்ணு, மதுசூதன, திருவிக்கிரம, வாமன, ஸ்ரீதர, ஹிருஷிகேச, பத்மநாப, தாமோதர மூர்த்திகளைத் தியானித்து திருமண்காப்பு அணிதல் **புண்ட்ர ஸம்ஸ்காரம்.**

3. கோத்திரம், சூத்திரம், முதலிய சரீர சம்பந்தமான சிறப்புகளை விடுத்து ஆத்மாவுக்குரிய ஒருபடியான தாஸ்ய நாமாவை அடியேன் - என்னும் பெயரை ஏற்றல் (ஸ்ரீ வைஷ்ணவ தாசன், பராங்குச

தாசன், பரகால தாசன், ராமாநுஜ தாசன், மதுரகவிதாசன் போல்வன **நாம ஸம்ஸ்காரம்.**

4. வேதச்சுருக்காய், ஸகல சாஸ்த்ர தாத்பர்யமாய் விளங்கும் ஞான ஒளி நல்கும் மந்திரங்களை - உபதேசித்தல் **மந்த்ர ஸம்ஸ்காரம்.**

5. சரீரம், ஆத்மா இவைகளைப் பற்றி வரும் கர்மம், ஞானம் இவற்றுக்குப் போக்கு வீடாக அமையும்படி, எம்பெருமானின் மூர்த்தியை, அமைத்துக் கொண்டு யஜ்ஞம் என்னும் திருவாராதனத்தை நியமித்தல் **யாக ஸம்ஸ்காரம்** அல்லது வேள்வி.

இந்த ஐந்தும் பெற்றவரே ஸ்ரீ வைஷ்ணவ நெறிக்கு உரிய அதிகாரி (ஐயங்கார் என்பதும் இது பற்றியே), அது பிறவிச் சாதியன்று.

பெரிய நம்பி முதலில் திருமந்திர உபதேசம் செய்து, பிறகு "மந்திர ரத்னம்" என்னும் துவயத்தை ஸம்பிரதாயப்படி இராமாநுஜருக்கு உபதேசித்தார்.

சிஷ்யர் வேண்டுகோளின்படி, பிறகு பெரிய நம்பி தம் தேவியுடன் காஞ்சிக்கு சென்றார். அங்கு தஞ்சமாம்பாளுக்கும் சமாச்ரயணம் என்னும் பஞ்ச சம்ஸ்காரங்களை ஆசார்யரைக் கொண்டு செய்வித்து, தமது இல்லத்தில் ஒரு பகுதியில் ஆசார்யனை குடியமர்த்தினார். தமிழ் மறையாம் திருவாய்மொழி மூலபாடம் தம் குருவிடம் சந்தை சொல்லி வந்தார்.

## குடும்பச் சூழ்நிலை

ஸ்ரீ வைஷ்ணவ நெறியின் சிறப்போ, ஆசார்யனின் பெருமையோ அறியாத தஞ்சமாம்பாள், தன் வருண, குல ஆசாரமே பெரிது என எண்ணி நடந்து கொண்டாள். இராமாநுஜர் எத்தனை எடுத்துச் சொல்லியும் பயனில்லை.

ஆசார்ய சம்பந்தம் பெற்று ஸ்ரீ வைஷ்ணவ நூல்களைப் பயின்று பிரசாரப் பணிகளையும் தொடங்கியிருந்த இராமாநுஜரின் தனி வாழ்வு மெல்ல மெல்ல ஸ்ரீ வைஷ்ணவப் பொது வாழ்வாக மலர்ந்து வந்தது. அவரை நாடிப் பலர் கூடினர். அவரது புகழும் ஆத்ம குணச் சிறப்பும் பார் எங்கும் பரவி மணம் வீசியது.

இந்நாளில் அவருக்கு எண்ணெய் தேய்த்துப் பணிவிடை செய்யும் ஓர் ஏழை ஸ்ரீ வைஷ்ணவன் ஒருநாள் மிகுந்த களைப்புடன் வந்து, பசிக்கிறது அன்னமிட வேண்டும் என்று வேண்டினார்.

பசியால் துடிக்கும் இவர் நிலை கண்டு நெஞ்சு துவண்ட இராமாநுஜர் உடனே அவருக்குச் சோறிடுமாறு தஞ்சமாம்பாளிடம் கூறினார்.

அவளோ, "இவர்களுக்கெல்லாம் என்ன வேலை, எப்போதும் தொல்லை", என்கிற பான்மையில் அலட்சியமாக சாதம் இன்னும் தயாராகவில்லை என்றாள்.

"பழையதாவது இருந்தால் உடனே போடு" என்றார் இராமாநுஜர். "அது கூட இல்லை" என்றாள் மனைவி.

அவ்வார்த்தையில் ஐயம் கொண்டு, மனைவியை வேறு வேலைக்கு ஏவி, தாமே தளிகை அறைக்குச் சென்று பார்த்தார். பாத்திரம் நிறைய பழையது இருந்தது. அதையெடுத்து ஸ்ரீ வைஷ்ணவனுக்கு வழங்கிவிட்டு, தஞ்சமாம்பாளிடம், "கருணையும் வற்றிவிட்டது; பொய்யும் புகுந்து விட்டது" என்று சொல்லிக் கடிந்து கொண்டார். இதுவும் அவளைத் திருத்தப் பயன்படவில்லை.

## ஆசார்ய அபசாரம்

மற்றொரு நாள் - தஞ்சமாம்பாளும் ஆசார்யன் பெரிய நம்பியின் தேவி விஜயாம்பாளும் கிணற்றில் நீர் எடுக்கச் சென்ற போது, சிறு சச்சரவு ஏற்பட்டது. விஜயாம்பாள் குடத்திலிருந்து நீர் தெளித்து தஞ்சமாம்பாள் குடநீரில் விழுந்து விட்டதாம்.

ஆசார்யனின் பத்னி என்றும் பாராமல் தன்னிலும் தாழ்ந்த சாதி என எண்ணி தரக் குறைவாகப் பேசிவிட்டாள் தஞ்சமாம்பாள். அதைக் கணவர் பெரிய நம்பியிடம் தனிமையில் தெரிவித்தாள் விஜயாம்பாள்.

பெரிய நம்பியோ இராமாநுஜர் செவிக்கு எட்டினால் விபரீதம் விளையும், அவர் அறிவதற்கு முன் நாம் இவ்விடத்தை விட்டு திருவரங்கம் சென்று விட வேண்டும் என்று மனைவியுடன் புறப்பட்டு விட்டார்.

வழக்கம் போல் ஆசார்யனை தண்டனிட வந்த இராமாநுஜருக்கு அவர் அங்கு இல்லாதது தெரிந்தது. குடியிருப்பையே பெயர்த்துக் கொண்டு சென்றிருப்பதையும் உணர்ந்து கொண்டார். என்ன அபசாரப்பட்டேனோ, சொல்லாமல் சென்றுவிட்டாரே என்று நெஞ்சம் பதறினார். தஞ்சமாம்பாளை அதட்டி நடந்ததைக் கூறு என்றார். மனைவியும் உள்ளதைச் சொல்லி உதாசீனப் பார்வையுடன் நின்றாள். "கொடிது, கொடிது, ஆசார்ய அபசாரம் மிகக் கொடிது" என்று அலறிக் கொண்டே இனி இவளுடன் இல்லறம் நல்லறமாகச் செல்லாது என்ற முடிவுக்கு வந்து விட்டார்.

“சற்றே ஏறு மாறாகில் கூறாமல் சந்நியாசம் கொள்” என்பர். இராமாநுஜரோ அத்தனையும் பொறுத்துப் பார்த்தார். நாளுக்கு நாள் தஞ்சமாம்பாள் போக்கு விபரீதமாய் மாறியது கண்டு, அமைதியாக ஆனால் தீர்மானமாக இனி உன்னுடன் இணைந்து வாழ்க்கை நடத்துவது இயலாது என்று கூறினார்.

தஞ்சமாம்பாள் ஆத்திரத்துடன் பிறந்தகம் போய் விட்டாள்.

இராமாநுஜர் பகவான் விஷ்ணுவின் அழகையும், மேன்மையையும் எடுத்துக் காட்டியபோது, முதலில் குருகுலம் அவரைக் கொல்ல நினைத்தது. ஸ்ரீ வைஷ்ணவ நெறியில் வாழ அவர் முற்பட்ட போது, அவரது இல்லம் ஒத்துழைக்க மறுத்தது.

ஸ்ரீ வைஷ்ணவ பணிக்கு இடையூறான இல்லறத்தைத் துறக்கத் துணிந்தார் இராமாநுஜர். உடனிருந்த கந்தாடை ஆண்டான் (தாசரதி) கூரத்து ஆழ்வான் போன்ற துணைவர்களோடு திருக்கச்சி நம்பியிடம் சென்று தம் கிடக்கையை வெளியிட்டார். முப்பதாம் வயதிலிருந்து நாற்பதற்குள் இல்லறத்தில் நிகழ்ந்தவை அவரை துறவு பூணச் செய்தது.

## முக்கோல் பிடித்த முனி

பரமாச்சார்யர் ஆளவந்தார் இல்லறம் நடத்தி, பின் துறவியாகிப் புகழுடன் விளங்கியவர். அவரது வரலாறு இராமாநுஜரின் நினைவில் பல்வேறு காட்சிகளைச் சித்தரித்தன.

நம்மாழ்வாரிடமிருந்து நாதமுனிகள் மறைந்து கிடந்த நாலாயிர திவ்யப் பிரபந்தங்களைப் பெற்று அவற்றைத் தொகுத்து, இசையமைத்தது. வேதம் தமிழ் செய்த மாறனிடம் மந்திர உபதேசம் பெற்றது; தாமறிந்த யோக ரகசியங்களைத் தமது குமாரர், ஈசுவரபட்டர், சிஷ்யர் உய்யக் கொண்டார், அவரது சிஷ்யர் மணக்கால் நம்பி வழியாக தமது பேரன் ஆளவந்தாருக்கு எட்ட நாத முனிகள் வழிவகுத்தது; பிறகு ஆளவந்தார் பாட்டனார் நாதமுனியின் விருப்பப்படி வாழ்க்கை நடத்தி நாடெங்கும் ஸ்ரீ வைஷ்ணவ நெறி தழைக்கும்படி ஞான நல்வித்து ஊன்றியது; வெளிப்படையாக ஸ்ரீ வைஷ்ணவ பிரசாரப் பணியைச் செய்ய இயலாத சூழ்நிலை நாட்டில் நிலவியது. அதனால் ஓர் ஆண்வழியாக (ஒவ்வொருவராக தகுதி பார்த்து) உபதேசித்தது; சோழ அரசின் பலத்தால் தமிழகத்தில் சைவம் ஓங்கி நின்றது. சங்கரர் திக் விஜயத்தால், பாரதம் எங்கும் பௌத்தரின் சர்வ சூனிய வாதத்தை எதிர்த்து அத்வைத வாதம் தலை தூக்கி நின்றது; இவை யாவும் அவரது மனக்கண்முன் வந்து நின்ற காட்சிளில் சில.

மறைந்து மீண்ட ஆழ்வார் அருளிச் செயல்களைப் பரப்புவதில் உள்ள சிரமங்கள்; தகுதி பார்த்து பரீட்சைகள் வைத்து, கடுஞ்சோதனைக்குப் பின்னரே ஆசார்யன் உபதேசிக்கும் மந்திரங்களைப் பெறுவதிலுள்ள கஷ்டம்; கல்விச் செருக்கினால் வாதிட வரும் வரட்டு தத்துவ வாதிகள் அவர்களது ஆடம்பர விளம்பரங்கள் இவற்றுக்கு எதிர் நீச்சுப் போட்டு, அமைதியாக ஸ்ரீ வைஷ்ணவத்தை எப்படிப் பரப்புவது என்று எண்ணமிடலானார் இராமாநுஜர்.

## பஞ்ச (ஐந்து) ஆசார்யர்கள்

முக்கோல் பகவரான ஆளவந்தார் நாடெங்கும் பல நல்லவர்களைத் தேடி தன் ஞான நல்வித்துக்களை ஊன்றி வைத்திருந்து இராமாநுஜர் கவனத்தைக் கவர்ந்தது. ஆளவந்தாரின் சிஷ்யர்களில் முக்கியமானவர்கள் பெரிய நம்பி, திருக்கோட்டியூர் நம்பி, பெரிய திருமலை நம்பி, திருமாலையாண்டான். திருவரங்கப் பெருமாள் அரையர் ஆகிய இவர்களிடம் தமது ஞான பொக்கிஷத்தைப் பகிர்ந்து கொடுத்திருந்தார். அவர்களிடம் இராமாநுஜரின் நெஞ்சும் சென்றது. தர்சனப் பணிக்குப் பூர்வாங்கமாக இல்லறத் துறவை மேற்கொள்ளத் தீர்மானித்தார்.

## துறவு மேற்கொள்ளல்

ஸ்ரீ ராமாநுஜர் ஆளவந்தாரை மனத்தில் இருத்தி, திருக்கச்சி நம்பியை முன்னிட்டு, அருளாளனை நேரில் தண்டனிட்டு, தமக்குச் சந்நியாச ஆச்ரமத்தை வழங்குமாறு ஆர்த்தியுடன் வேண்டினார்.

காஞ்சி அனந்த புஷ்கரணியில் நீராடி, காஷாயம் உடுத்தி, முக்கோல் பிடித்து, நீரில் நின்றவாறு துறக்க வேண்டியவற்றைத் துறந்தேன். துறந்தேன் என மும்முறை கூறி சூளுரைக்க வேண்டிய வேளையில் இராமாநுஜர் முதலியாண்டானை - (தாசரதியைத்) தவிர மற்ற யாவற்றையும் துறந்தேன் என்று கூறினார். காரணம் முதலியாண்டான் இராமாநுஜருக்கு முன்னமே ஸ்ரீ வைஷ்ணவ பாரம்பர்யச் சிறப்பும் பெற்றவர் என்பதே.

துறவுகோலம் பூண்ட இராமாநுஜர் முன்னிலும் அதிகமாகப் பொலிவுற்று விளங்கினார்.

## துறவுக்கோலம்

அவ்வடிவழகை வருணித்து அடியார்கள் பல மொழிகளிலும் பல படியாக அனுபவித்து வருகிறார்கள்.

**"காஷாய சோபி கமனீய சிகா நிவேசம்**
**தண்டத்ரயோஜ்வல கரம் விமலோப வீதம்**
**உத்யந்திநேச நிபம் உல்லஸதூர்த்வ புண்ட்ரம்**
**ரூபம் தவாஸ்து யதிராஜ த்ருசோர் மமாக்ரே"**

அப்போதலர்ந்த செவ்வியுடன் அவருடைய வடிவழகைக் கண்டு, "யதிராஜா" என்று அழைத்து மகிழ்ந்தார் கச்சி நம்பி. இராமாநுஜருக்கு அருளாளன் இட்ட துரீய ஆசிரமப் பெயர் "யதிராஜன்" என்பதே எனக் கருதிப் போற்றினார் அனைவரும்.

## சிஷ்யர் குழாம்

முக்கோல் பிடித்த யதிராஜன் ஸ்ரீ வைஷ்ணவ சாம்ராஜ்யப் பணியை இனிது தொடங்கினார். அப்போது அவரது வயது 35 (1052)

முதலில் அவர் நினைவில் நின்றவர் கோவிந்த பட்டரே. யாதவரிடமிருந்து தம் உயிரைக் காத்துக் கொடுத்த அந்த ஆத்மாவை, சைவச் சிறையிலிருந்து மீட்பதே தம் முதற் பணி எனக் கொண்டார். காளஹஸ்தியில் தங்கிய அவருக்கு அருகே திருப்பதியில் வசிப்பவர் அம்மான் திருமலை நம்பி.

காஞ்சி அருளாளனுக்கு கச்சி நம்பி எப்படியோ, அப்படியே திருமலை அப்பனுக்கு அந்தரங்க கைங்கர்யம் செய்து வந்தார் திருமலை நம்பி.

ஆளவந்தாரின் சிஷ்யரான அவர் தீர்த்த கைங்கர்யம் புரிந்து, வேங்கடவனுக்குத் தந்தை போன்று விளங்கினார். அவரைக் கொண்டு கோவிந்தரைத் திருத்திப் பணி கொள்ள யதிராஜர் திட்டமிட்டார். திருப்பதிக்கு இது குறித்து ஓலை அனுப்பினார்.

## முதலியாண்டான்

அடுத்து இராமானுஜரின் நினைவுக்கு வந்தவர் பூமி, கமலா என்னும் அவரது உடன் பிறந்தவர்களில் பூமியின் பிள்ளை தாசரதி எனும் முதலியாண்டான். அவர் சிறந்த வைணவ குலத் தோன்றல். சர்வத்தையும் துறந்த போது யதிராஜர் அவரை மட்டும் துறக்கவில்லை. முதலியாண்டானும் இராமானுஜரின் நிழலும் அடிதாறும் போல அவரைத் தொடர்ந்தார். யதிராஜரும் அவரைத் தம் த்ரிதண்டமாகவே (முக்கோல்) கருதினார்.

## கூரத்து ஆழ்வான்

மூன்றாவதாக இராமாநுஜரைக் காட்டிலும் வயதிலும், ஞானத்திலும் ஏன் சீலத்திலும் விஞ்சி நின்ற கூரேசர். தம் சிஷ்யருள் தலை சிறந்தவர் என்றே யதிராஜரால் மதிக்கப் பெற்றார்.

கூரேசர் செல்வச் செழிப்பு மிகுந்திருந்தவர். அவரது பத்தினி ஆண்டாள் கணவனை விஞ்சிய ஞானி எனலாம். தமக்கிருந்த செல்வமனைத்தும் அறவழியில் செலவிட்டு, ஸ்ரீரங்க யாத்திரை மேற்கொண்டார் கூரத்து ஆழ்வான்.

காட்டு வழி செல்கையில், பின் தொடர்ந்த மனைவி ஆண்டாள் தயங்கித் தயங்கி வழி நடந்தைக் கண்டு "மடியிலே கனம் இருந்தால் அன்றோ வழியில் பயமிருக்கும், ஏன் தயங்குகிறாய்?" என்றார்.

"தாங்கள் அமுது செய்யும் பாத்திரம், பொன்வட்டிலை மாத்திரம் கொணர்ந்தேன்" என்றாள் பத்தினி.

"அடுத்த வேளை சோறு பற்றிய நிச்சயம் இல்லாத வாழ்வையன்றோ நாம் மேற்கொண்டிருக்கிறோம்; அது எதற்கு? அதை இப்படிக் கொடு" என்று ஆண்டாளிடமிருந்த பொன்வட்டிலை வாங்கி, பக்கத்துப் புதரில் விட்டெறிந்தார். மனைவியின் தயக்கம் போய்விட்டது. இருவரும் விரைந்து ஸ்ரீரங்கம் சேர்ந்தனர்.

அரங்கனைச் சேவித்தும் இராமானுஜரின் துறவைப் பற்றிக் கேள்வியுற்று, உடனே காஞ்சீபுரம் வந்து அவரிடம் பணிந்து நின்றார் ஆழ்வான்.

புலமைச் சிறப்பும், தூய ஒழுக்க நெறியும், இரக்கப் பண்பும், வைராக்கிய முதிர்ச்சியும் எல்லாவகைப் பூர்த்தியும் உள்ள, கூரத்து ஆழ்வானை சிஷ்யராகப் பெற்றதால் இராமாநுஜரின் பெருமை இமய மலைபோல் உயர்ந்தது.

## யதீந்திரர் பிரபாவம்

யதிராஜர் தம் திவ்யத் திருமேனியில் பன்னிரு திருநாமங்கள் திகழ, முதலியாண்டான் ஒருபுறம் கூரத்து ஆழ்வான் மறுபுறம் இருக்க, மடத்தில் வந்தவர்களுக்கு அறிவுரை வழங்கும் அழகு, கண்கொள்ளாக் காட்சியாக அமைந்தது. "துரோணாசாரியருக்கு ஏகலைவன் போல், ஆளவந்தாருக்குத் தான்" என்று தம்மைச் சொல்லிக் கொண்டார் யதிராஜர். ஆனால் யதிராஜரைச் சேவித்தோர், அவர் மொழி கேட்டோர் ஆளவந்தாரிலும் மிக்கவரே இவர் என்று வாய்வெருவினார்.

இராமாநுஜரின் பூர்வாசிரம குரு யாதவப் பிரகாசரின், வயது மூத்த தாயார் யதிராசர் மடத்தில் அவரை சேவித்து, அவரது உபதேசக் கருத்துக்களில் ஈடுபட்டு இதற்கு முன் யாரும் சொல்லாத அரிய வேதாந்த அர்த்தங்களை எளிய இனிய மொழியில் இப்படி, தெளிவுபடுத்திக் கூறும் இவர் ''அவதார புருஷனே'' என்று அறுதியிட்டு, இந்த மஹானை இழந்து வாடுகிறானே என் மகன் யாதவப் பிரகாசன் என்று சோகித்து, இவன் எவ்வளவு படித்தென்ன, பகவத் க்ருபை வேண்டாமா? யதிராஜர் போன்ற சிஷ்யர்களின் பரிக்ரஹம் (மேலோர் அங்கீகாரம்) வேண்டாமா? இனிமேல் நம் எல்லோருக்கும் யதிராஜரே கதி என்று கூறிக் கொண்டே வீடு சேர்ந்தாள்.

வீடு சென்ற முதியவள் முதல் வேலையாகத் தன் பிள்ளை யாதவப் பிரகாசரை அழைத்து மடத்தில் வாழும் யதிராஜரின் அபூர்வமான தேஜஸையும், அறிவுரைச் சிறப்பையும் நற்பண்புகளையும் கூறி, அவர் அடி பணிந்தால்தான் உனக்கும், எனக்கும், நம் குலத்துக்கும் நல்ல கதி கிட்டும் என்று கூறி முடித்தாள்.

## குரு சிஷ்யரானார் - சிஷ்யர் குருவானார்

யாதவப் பிரகாசர் வயது முதிர்ச்சியாலும், மனச் சோர்வாலும் வாழ்வில் நம்பிக்கை குன்றி நிராசையுடன் இருந்தார். தாயின் நல்லுரை அவருக்கு ஆறுதலளித்தது; புதிய ஊக்கம் பிறந்தது; அருளாளனுடன் தனிமையில் உரையாடும் பேறு பெற்றுள்ள கச்சி நம்பியே இனி நமக்கும் கதி என்று எண்ணி கோயிலுக்குச் சென்று அவரிடம் தன் மனக்கவலையை வெளியிட்டார். நிம்மதி வேண்டினார். அருளாளர் திருவுளம் கேட்டு அறிய விரும்பினார்

மறுநாள் அருளாளன் கருத்தாக கச்சி நம்பி, ''யாதவப் பிரகாசரே நம் எல்லோருக்கும் உள்ள ஒரே கதி இனி யதிராஜர் தான். இதுவே அருளாளன் அறுதியிட்ட கருத்து'' என்றார்.

தயங்காமல் உடனே யதிராஜர் மடத்துக்குச் சென்றார் யாதவப் பிரகாசர். எதிர்பாராத அவரது வரவை எல்லோரும் ஆவலுடன் கூர்ந்து நோக்கினார். இதுவரை இராமாநுஜரை தன் சிஷ்யராகவே பார்த்தவர்; அவரை இப்போது யதிராஜராகப் பார்த்து பிரமித்தார் யாதவர்; கூரத்து ஆழ்வான் போன்ற ஞானியர் பலர் அவர் அடிபணிந்து இருந்த கோலத்தைக் கண்டார்.

யாதவப் பிரகாசரைக் கண்டதும் யதிராஜர், மிக்க மரியாதையுடன் வரவேற்றார். தத்துவ விசாரப் பேச்சைத் தொடங்கினர் இருவரும். தெளிவுக்காக யாதவர் கேட்ட பல நுண்ணறிவுக் கேள்விகளுக்கு, கூரத்து

ஆழ்வான் ஆணி அறைந்தாற்போல் பதில் அளித்தார்; இராமாநுஜரின் விளக்கங்களையும் எடுத்துக் காட்டினார்.

## கோவிந்த ஜீயர்

இப்பேச்சின் முடிவில் யாதவப் பிரகாசர் யதிராஜர் திருவடிகளில் விழுந்து தன்னை ஆட்கொள்ளுமாறு வேண்டினார். பஞ்ச சம்ஸ்காரத்துடன் பாகவத சந்நியாச ஆச்ரமும் வேண்டிப் பெற்றுக் கொண்டார். "கோவிந்த ஜீயர்" என்று துறவுப் பெயர் பூண்டு, புத்துயிர் பெற்றார் அவர். அப்போது, அவருக்கு வயது எண்பது இருக்கும்.

குரு சிஷ்யரானார்; சிஷ்யர் குருவானார் உலகம் வியக்கும் இந்த அரிய நிகழ்ச்சி இராமாநுஜரின் வாழ்க்கை நிகழ்ச்சியாயிற்று. கோவிந்த ஜீயர், "யதிதர்ம சமுச்சயம்" என்று துறவு பற்றிய நூல் ஒன்றும் இயற்றினார்.

யாதவர் ஸ்ரீ வைஷ்ணவராகத் திருந்தியதும், யதிராஜருக்குத் தம் பூர்வாசிரமத்தம்பி கோவிந்தனின் நினைவு எழுந்தது. யாதவர் கூற்றுப்படி இடையில் சைவராக ஆனவர் கோவிந்தர். கோவிந்தரை ஸ்ரீ வைஷ்ணவராக்கித் தம்முடன் இணைத்துக் கொள்ள எண்ணினார் யதிராஜர். உடனே, அவரது அம்மான் திருமலை நம்பிக்கு யதிராஜர் ஓலை எழுதி அனுப்பினார். யதிராஜர் விருப்பப்படி கோவிந்தரை நாடி திருமலை நம்பி காளஹஸ்திக்குச் சென்றார்.

## தம்பியும் திரும்பினார்

காளஹஸ்தியில் லிங்கத்துக்கு அபிஷேகம் செய்து கொண்டிருந்தார் உள்ளங்கை நாயணாரான கோவிந்தர். அவரை அணுகிய அம்மான் திருமலை நம்பி, "கோவிந்தா! கொன்றைச் சடையானை குளிர நீராட்டினால் என் உனக்கு உண்டாம் பயன்?" என்று கேட்டுக் கொண்டே வந்தார். இருவரும் தங்கள் கருத்துக்களைப் பரிமாறிக் கொண்டனர். இராமாநுஜர் துறவு பூண்டு யதிராஜராக விளங்குவதையும், உள்ளங்கை நாயனாரின் குரு யாதவர், பரம வைஷ்ணவராகத் திருந்தி கோவிந்த ஜீயராகிவிட்டதையும் தெரிவித்தார்.

> **"தேவும் எப்பொருளும் படைக்க**
> **பூவில் நான் முகனைப் படைத்த**
> **தேவன் எம்பெருமானுக்கல்லால்**
> **பூவும் பூசனையும் தகுமோ"**

என்று நம்மாழ்வார் வாக்கைக் காட்டி, கோவிந்தரின் பல கேள்விகளுக்கும் தக்க சமாதானங்கள் கூறினார். சுருதி, ஸ்மிருதி, இதிஹாஸ புராணங்களின் ஆதாரங்களையும் எடுத்துரைத்தார்.

இவையனைத்தும் கேட்ட கோவிந்தர், திருமலை நம்பியின் அடிபணிந்து தம்மை உய்வித்து அருள வேண்டும் என வேண்டினார். "யதிராஜன் இன்னருளே உம்மைத் திருத்தியது; அவர் ஓலை எழுதி என்னைப் பணித்தார். இனி என்னுடன் இரும்" என்று அவருக்குப் பஞ்ச சம்ஸ்காரங்கள் செய்து, திருப்பதிக்கு அழைத்துச் சென்று தம்முடன் வைத்துக் கொண்டார். கோவிந்தர் மனம் யதிராஜர் இன்னருளைக் கொண்டாடியது.

## திருவரங்கத்தின் அழைப்பு

இதற்குள் ஸ்ரீ வைஷ்ணவ தலைமைப் பீடமான ஸ்ரீரங்கத்தில் உள்ளவர்கள், காஞ்சியில் யதிராஜரின் புதிய எழுச்சியைக் கேள்வியுற்று மகிழ்ந்தனர். இராமாநுஜரை நேரில் கண்டு, அவரது நல்லுறைகளைக் கேட்டு நாள்தோறும் பல்லாயிரவர் அவர் அடிபணிந்து சிஷ்யராகின்றனர் என்னும் செய்தி ஸ்ரீரங்கவாசிகளைத் தூண்டியது. பெரிய நம்பி தலைமையில் அரங்கன் திருமுற்றத்து அடியார் கூடினர். யதிராஜரை உடனே ஸ்ரீ வைஷ்ணவத்தின் தலைநகரான ஸ்ரீரங்கத்துக்கு அழைக்க வேண்டும் என்று முடிவு செய்தனர்.

## அரங்கன் அடியார்கள் சூழ்ச்சி

திருக்கச்சி நம்பியை விட்டு இராமாநுஜர் வரமாட்டாரே, அருளாளனும் விடமாட்டானே என்றார் பெரிய நம்பி. அரங்கனின் ஆணையாகத் தெரிவித்து இராமாநுஜரை அருளாளன் அனுமதியுடன் அழைத்து வர ஒரு சூழ்ச்சி செய்தனர் அரங்கன் அடியார்கள்.

ஆளவந்தாரின் குமாரர், திருவரங்கப் பெருமாள் அரையர் தேவ கானம் இசைப்பதில் வல்லவர்; அவரை காஞ்சிக்கு அனுப்பி பரம ரஸிகனான அருளாளனை திவ்யப் பிரபந்தப் பண் இசை கேட்கச் செய்து அதில் ஈடுபடுத்தி, அவன் அனுமதி பெற்று, வரதன் கட்டளையாகக் கச்சி நம்பியிடமிருந்து, இராமாநுஜரை ஸ்ரீரங்கத்துக்குக் கொண்டு சேர்க்க வேண்டும் என்பதே அவர்கள் தந்திரம்.

திருவரங்கம் பெரிய கோயில் அரையர் காஞ்சி பெருமாள் கோயிலுக்குச் சென்றார். அங்கு அருளாளன் திருமுன் நின்று மெய்மறந்து பாடினார். திருச்செவி சாற்றிய வரதனும் தன் வசமிழந்து, அவர் வசமானான். கான

மழையில் சொக்கிப் போன வரதன் அரையருக்கு வரம் கொடுக்க முன் வந்தான்.

அரையரும் வரம் கேட்டார். "யதிராஜரைப் பரிசாக தமக்குத் தந்தருள வேண்டும். அதுவே அரங்கன் விருப்பம்" என்றார் அரையர். "மோசம் போய்விட்டோமே" என்றனர் அருளாளனும் உடன் இருந்த கச்சிநம்பி முதலானோரும்.

## யதிராஜர் உடையவரானார் (1056)

ஆண்டான், ஆழ்வான் புடைசூழ இராமாநுஜர் ஸ்ரீரங்கம் புறப்பட்டார். திருக்கச்சி நம்பியிடம் கண்ணீர் சொரிந்து விடை கொண்டார் யதிராஜர். அரையரைப் பின் தொடர்ந்து ஸ்ரீரங்கம் சேர்ந்தார்.

யதிராஜர் வரவு கேட்டு, வடதிருக்காவேரி வரை அரங்கன் ஸந்நிதி மரியாதைகளுடன் வந்து பெரிய நம்பி தலைமையில் உற்சாகமான வரவேற்பளித்தனர் ஸ்ரீரங்கவாசிகள்.

ஸ்ரீரங்கத்தில் பட்டணப் பிரவேசமானதும் முறைப்படி அரங்கனை அணுகித் திருவடி தொழுதார் யதிராஜர். "வாரீர் எம் உடையவரே" என்று அருளிப் பாடிட்டு அழைத்தார் அரங்கன். "இனி உபய விபூதி ஐச்வர்யமும் நீர் இட்ட வழக்காயிருக்கும்" என்றும் விளக்கி அருளினன் அரவணைப்பள்ளியான்.

"ஆபாத சூடம் ஹரிம் ஸயானம்" என்று திருப்பாணரை அடியொற்றி அரங்கனை அடி முதல் முடியளவாக சேவித்துப் பல்லாண்டு பாடி, "நெஞ்சுருகக் கண்பனிப்ப" திருமணத்தூணைப் பற்றி நின்றார் உடையவர்.

அன்று முதலே தென்னரங்கன் கோயில் பணிகள் படிப்படியாக உடையவர் பொறுப்பாயிற்று. அரங்கன் திருவுளம் அறியாத சில கோயில் ஊழியர் காட்டிய எதிர்பெல்லாம் இராமாநுஜரின் கருணை வெள்ளத்துக்கு எதிர் நீச்சல் போடமாட்டாமல் மாய்ந்து ஒழிந்தன. பெரிய நம்பியின் சீரிய தலைமையில் கோயில் பணிகளோடு, ஸ்ரீ ஆளவந்தாரின் அருமை சிஷ்யர்கள் வாயிலாக அர்த்த விசேஷங்களைக் கேட்கும் முயற்சியிலும் முனைந்தார் உடையவர்.

பெரிய நம்பியிடம் மந்திர ரத்னமான துவயத்தின் அர்த்தம் கேட்டு, அதன் பயனாக பகவத் சந்நிதியில் நித்ய கைங்கர்யம் கிட்டப் பெற்று மகிழ்ந்தார்.

பெரிய நம்பி உடையவரிடம் பரிவு கொண்டு மற்றும் உள்ள விசேஷார்த்தங்களை ஸ்ரீ ஆளவந்தாரின் மற்றுள்ள சிஷ்யர்களான திருக்கோட்டியூர் நம்பி முதலானோரிடம் கேளும் என்றார்.

## பதினெட்டு முறை நடந்தார்

உடனே ஒரு கணமும் தாமதியாமல் உடையவர் ஸ்ரீரங்கத்திலிருந்து கோஷ்டிபுரம் - திருக்கோட்டியூருக்குப் பயணமானார். ஊருக்குள் நுழைந்ததும், தமது பரிவாரங்களை நிறுத்திவிட்டு, மிகுந்த பணிவுடன் நம்பி திருமாளிகை எவ்விடம் என வினவி அவ்வகத்தளவும் வீதியில் தண்டனிட்டுக் கொண்டே சென்றார்.

திருக்கோட்டியூர் நம்பியோ, இப்படி தண்டனிட்டுக் கொண்டு வந்த உடையவரை ஏறிட்டும் பார்க்கவில்லை.

இவர் வந்ததும் நம்பி ஸ்ரீரங்கத்துக்குப் புறப்பட்டு விட்டார். உடையவர் விடாமல் அவரைப் பின்தொடர்ந்தார்.

ஸ்ரீரங்கநாதனை சேவித்த போது, நம்பிக்கு அருளிப் பாடிட்டு "உடையவருக்கு சிஷ்யலக்ஷண பூர்த்தி உண்டு; ரகஸ்யார்த்தம் ஸாதிக்கலாம்" என்று பெருமாள் அனுமதி கிடைத்தது.

ஆனால், கோயிலிருந்து திரும்பிய நம்பியை உடையவர் கிட்டி வந்து தண்டனிட்ட போது "ஊர் ஏறவாரும்" என்று சொல்லிவிட்டுச் சென்று விட்டார். உடையவரும் விடாமல் தொடர்ந்து, மறுதினமும், திருக்கோட்டியூர் சென்று முன் போலவே தண்டனிட்டு நம்பி முன் நின்றார்.

நம்பியும், "இன்றைக்குப் போய் வாரும்" என்று சொல்லித் திருப்பிவிட்டார். இம்மாதிரி பதினெட்டு முறை அவரை ஸ்ரீரங்கத்துக்கும் தம் ஊருக்குமாக அலைக்கழித்தார்.

உடையவர் வேறு வழியின்றி அரங்கனிடம் திரும்பினார். அப்போது திருக்கோட்டியூர் நம்பியின் சிஷ்யர் ஒருவர் அரங்கனை சேவிக்க ஸ்ரீரங்கம் வந்திருந்தார். அவரிடம், "இது தகவோ, எளியேன்பால் கருணை காட்டலாகாதோ?" என்று கேட்டதாக ஆசாரியரிடம் தெரிவிக்க வேணும் என்று சொல்லி அனுப்பினார்.

## தென்னரங்கன் செல்வம்

இதற்கிடையே திருவரங்கம் பெரிய கோவிலைப் பழுது பார்த்து, செப்பனிடும் பணியில் முனைந்தார் உடையவர். மடைப்பள்ளியில்

காலம் தவறாது தளிகைகளைத் தயாரித்து, அமுது செய்வித்து விநியோகிக்க, பல ஏற்பாடுகள் செய்தார். சந்நிதி வருவாய் பெருகும் வகையில் கிரய தளிகைகளும் தயாராயின. மண்டபங்கள், நந்தவனங்கள், மலர்ச் சோலைகள், மருத்துவச் சாலைகள், நூல் நிலையங்கள் அனைத்துக்கும் அரங்கன் திருமுற்றத்தில் இடம் கொடுத்து சீராக நடத்த வழி வகுத்தார்.

ஆழ்வார்ளில் பேயாழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார் ஆகியோர் விரும்பிய நந்தவன கைங்கர்யத்துக்கு விசேஷ ஏற்பாடுகள் செய்தார்.

**"வண்டினம் முரலும் சோலை மயிலினம் ஆலும் சோலை**
**கொண்டல் மீதணவும் சோலை குயிலினம் கூவும் சோலை"**

என்று ஆழ்வார் அனுபவித்த ரஸம் குன்றாமல் ஆராமம் சூழ்ந்த அரங்கத்தைக் காத்தார். நிர்வாகப் பொறுப்பை ஏற்று நடத்தவல்ல அகங்கனைத் தேர்ந்தெடுத்ததும் அவரது அறிவுக் கூர்மையைக் காட்டுகிறது.

சோழச் சிற்றரசன் அகளங்கன் உடையவரிடம் சேர்ந்தது ஒரு சுவையான வரலாறு.

ஸ்ரீ ராமானுஜர் யதிராஜராகி, ஸ்ரீரங்கம் சேர்ந்து உடையவருமாகி, அங்கு தென்னரங்கன் செல்வத்தைத் திருத்தி வைக்கும் பணியில் ஈடுபட்டுள்ளதைக் கேள்வியுற்ற பக்தர்கள், அரங்கனின் சொத்தான தங்களையும் திருத்திப் பணிகொள்ள வேண்டும் என்று பாரித்துக் கொண்டு நாட்டின் பல பகுதிகளிலுமிருந்து ஸ்ரீரங்கத்தில் உடையவன் திருவடிகளில் பெருந்திரளாகக் கூடிய வண்ணம் இருந்தனர்.

## பிள்ளை உறங்கா வில்லி

ஸ்ரீரங்கத்தை அடுத்த உறையூரைத் தலைமையாகக் கொண்டு ஒரு சோழச் சிற்றரசன் அப்பகுதியை ஆண்டு வந்தான். அவன்தான் அகளங்கன். அவனுக்கு திருமேனி காவலாக ஒரு மல்லன் உண்டு. உறங்காமல் எப்போதும் விழிப்புடன் அரசனைக் காத்து வந்த அம்மல்லன் வேடர் குலத்தவன். ஆகையால் அவனைப் 'பிள்ளை உறங்கா வில்லி' என்று அழைப்பர். திருவரங்கத்தை அடுத்த திருவெள்ளறையில் வசித்து வந்த அவனுக்கு பொன்னாய்ச்சி என்று ஓர் அழகிய காதலி, எழில் அனைத்தும் திரண்டெழுந்து உருவானவள், பூங்கொடி போன்ற அவளது மலர்க் கண்ணழகில் மயங்கி நின்றவன் வில்லி.

ஸ்ரீரங்கத்தில் வசந்த விழாவைக் காண காதலியுடன் கடுவெய்யிலில் புறப்பட்டான் மல்லன். வடதிருக்காவேரியில் பொன்னாய்ச்சிக்குக் குடைபிடித்து வந்து கொண்டிருந்தான். அதே சமயம் உடையவர் அனுஷ்டானத்துக்காக காவேரியில் தமது ஏராளமான சிஷ்யர்களுடன் எழுந்தருளியிருந்தார்.

ஒரு பெண்ணுக்கு நடைபாவாடையிட்டுக் குடை பிடித்துச் செல்லும் மல்லனைப் பரிகாசமாகப் பார்த்தனர்; முணு முணுத்தனர். ஜீயரும் இதே வினோதக் காட்சியைக் கண்டார். உடனே ஒரு சிஷ்யரை அனுப்பி அந்த மல்லனை அழைத்து வருமாறு பணித்தார்.

ஜீயர் அழைப்புக் கேட்டு, மனைவியைக் குடையுடன் ஒருபுறம் நிறுத்திவிட்டு, மிக்க பணிவுடன் வந்து உடையவரை வணங்கி நின்றான் வில்லி.

ஜீயர் வில்லியைப் பார்த்து, "அப்பா! நீ பட்டப் பகலில் பலர் அறிய லஜ்ஜையை விட்டு மனைவிக்கு குடை பிடித்துக் கொண்டு வருகிறாயே, அப்படி அவளிடம் என்ன விசேஷம் கண்டாய்?" என்று அன்புடன் கேட்டார்.

"ஸ்வாமி இவள் அற்புதமான கண் அழகு படைத்தவள். அக்கண்ணழகில் தோற்று நிற்கிறேன். அந்த மலர்க் கண்கள் எதிர்வெய்யிலில் கருகிப் போகாமல் இருக்கவே குடை பிடித்து வந்தேன்"! என்றான் வில்லி.

"ஓ அப்படியா? பரம ரஸிகனாயிருக்கிறாயே! இதைக் காட்டிலும் அழகான கண்ணைப் பார்த்தால், அதிலும் ஈடுபடுவாயோ!" என்று கேட்டார்.

"அதற்கென்ன தடை? அப்படி இவ்வுலகில் காண முடியாது என்றே நினைக்கிறேன்" என்றான் வில்லி.

"காட்டினாலோ?" என்றார் உடையவர்.
"அதிலும் ஈடுபடுவேன்" என்றான் அந்த ரஸிகன்.

உடனே உடையவர் என் பின்னே வா என்று கையுடன் வில்லியை அழைத்துச் சென்று அரங்கன் திருவடிவாரத்தில் நிறுத்தினார். "அழகிய மணவாளா! திருப்பாணாழ்வார் போல்வருக்குக் காட்டின அக்கண்ணழகை, இதோ வந்திருக்கும் இவ்வில்லிக்கும் நீ காட்டியருள வேணும்" என்று பிரார்த்தித்தார்.

**கரியவாகிப் புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடி**
**நீண்ட அப்பெரிய வாய கண்களை**

அரங்கன் அமலங்களாக விழித்தான். அழகனின் அவ்வருள் நோக்கில் அகப்பட்ட மல்லன் மெய் மறந்து மனம் ஒடுங்கி ஆவி குளிர்ந்து என் அமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே என்ற நிலையை எய்தி விட்டான். ஆனந்தக் கண்ணீர் பெருக மெய்சிலிர்த்து நின்றான்.

**மாதரார் கயற்கண் என்னும் வலையுள் பட்டு அழுந்துவேனை**
**போதரே என்று சொல்லிப் புந்தியுள் புகுந்து - தன் பால்**
**ஆதரம் பெருக வைத்த அழகன் ஊர் அரங்கமன்றே**

திருமாலை

அன்று முதல் அவ்வில்லி உடையவருக்கு அடியவனாகி அரங்கின் கண் அழகுக்குப் பாதுகாவலனாகி, உடை வாளை உருவி எடுத்துக் கையில் பிடித்த வண்ணம் பகவத் கைங்கர்யத்தில் ஈடுபட்டான். "பிள்ளை உறங்கா வில்லி தாசர்" என அழைத்து ஜீயர் மடத்தில் அவரை மதிப்புடனும் அன்புடனும் போற்றினர்.

## வண்டவில்லியும் - செண்டவில்லியும்

அகளங்கன் என்னும் அரசனிடமே வில்லியின் மருமக்கள் இருவரும் பணிபுரிந்து வந்தனர். வண்டவில்லி, செண்டவில்லி என்று அவர்களுக்குப் பெயர்.

மாமனைத் தொடர்ந்து வண்டவில்லியும், செண்ட வில்லியும் உடையவர் அடிபணிந்து பஞ்ச சம்ஸ்காரம் பெற்று அடியராயினர். அரசனிடம் அவ்வேடர்கள் பெற்று வந்த ஊதியம் அனைத்தையும் ஜீயர் திருவடிகளில் சமர்ப்பித்து விடுவர். அரசுப் பணிகள் போக, மீதிநேரங்களில் அடியார் பணிபுரிந்து மடத்துப் பிரசாதம் பெற்று தேகயாத்திரை நடத்தினார். உடையவரிடம் சேர்ந்தபின் அவர்களது நடை உடை பேச்சு எல்லாம் "ஸாத்விகமாக" மாறி, அவர்களுக்கு தெய்கவிகப் பொலிவு ஏற்பட்டது. இப்புனித மாறுதல்களைக் கண்ட அரசன் அகளங்கன் அது குறித்து விசாரித்தான். உடையவர் பெருமையை உணர்ந்தான். பரமபாகவதர்களாகி விட்ட அவ்வேடர்களைத் தன் பணியில் ஈடுபடுத்தாமல் அவர்கள் பெற்று வந்த ஊதியத்தை மட்டும் தவறாமல் அனுப்பினான்.

இதைப் பற்றி ஒர சமயம் கேள்வியுற்ற ஜீயர் ஊழியம் இல்லாமல் கிடைக்கும் அந்த ஊதியத்தை ஏற்க மறுத்து திருப்பியனுப்பி விட்டார்.

## அகளங்க நாட்டு ஆழ்வான்

உடையவர் செய்கையின் காரணத்தை அறிந்த அரசன் ஜீயரின் பொருள் வழித்தூய்மையை, வெகுவாகப் போற்றினான். ஜீயரின் பல சீரிய பண்புகளையும் தெய்வீக அருளையும் கண்டு ஆச்சரியமுற்றான். வில்லியர், வேடருக்கும் கூட ஆத்ம குண பூர்த்தியை அளிக்கவல்ல அண்ணலின் அடிகளைப் பற்றி நாமும் உய்ந்து போகலாமே என்று எண்ணினான்.

"கரியைப் பொன் ஆக்குவாரைப் போல, ஊனின் வனப்பிலும், வளர்ப்பிலும் புற அழகுகளிலும், பொன்னிலும், பொருளிலும் இன்பம் காணும் அற்ப நிலையை மாற்ற உங்களுக்கு ஆத்ம ஞானத்தில் விளையும் ஆனந்தப் பெருவெள்ளத்தை அனுபவிக்கும்படி செய்த அந்த அருளாளரை, உங்களை முன்னிட்டு அடிபணிய விரும்புகிறேன். என்னையும் அழைத்துச் செல்வீராக" என்று வில்லிகளை வேண்டினான் அரசன்.

வில்லிதாசர் ஜீயர் அனுமதி பெற்று, அரசனை அழைத்து வந்தார். உடையவரைக் கிட்டிய பின் அகளங்கச் சோழன், அகளங்க நாட்டாழ்வானாக மாறிவிட்டார். அரங்கன் கோயிற் பணிகள் சீராக நடைபெற அவரைப் பொறுப்பாக்கி விட்டார் ஜீயர். (இத்தகைய வரலாற்றுச் சான்றுகள் பல கோயிலொழுகு நூலில் காணலாம். உடையவருக்கு முன்னும் பின்னும் இக்கோயில் திருத்தமும் பெருக்கமும் பெற்று வளர்ந்ததைக் குறிக்கும் சான்றுகள் பல உள். உடையவர் காலந்தொட்டு இது வரை சுமார் 350 கல்வெட்டுகளும் மற்றும் பல செப்பேடுகளும் உண்டு.)

அரங்கனைச் சுற்றி உடையவர் தலைமையில் பொருட் செல்வத்தோடு அறிவுச் செல்வமும் அருட் செல்வமும் கூடிற்று. பக்தி வெள்ளம் காவிரிப் பெருக்குடன் போட்டியிட்டது. ஆராமம் சூழ்ந்த ஆரங்கத்தினின்று யதிராஜன் புகழ் திக்கெட்டும் பரவி மணம் வீசியது.

## திருக்கோட்டியூர் நம்பி அழைப்பு

ஸ்ரீ ராமானுஜருக்கு பஞ்ச சம்ஸ்காரம் செய்து, மந்திர ரத்னமாகிய துவயத்தை அருளிய பெரிய நம்பி தமது குமாரன் புண்டரீகாக்ஷனையும் உடையவர் திருவடிகளில் சேர்த்தார்.

அதே போன்று, திருக்கோட்டியூர் நம்பியும் உடையவரின் ஆர்த்தியும், ஆத்மகுண பூர்த்தியும் பற்றிக் கேள்வியுற்று அவரை நேரில் அழைத்திருந்தார்.

“தண்டும் பவித்திரமுமாகத் தாம் ஒருவரே வருவது”

என்று நிபந்தனையும் இட்டிருந்தார். மிக உகப்புடன் உடையவர், கூரத்தாழ்வானையும் முதலியாண்டானையும் கூட்டிக் கொண்டு, திருக்கோட்டியூர் சென்று, நம்பி திருவடிகளில் தண்டனிட்டார்.

“உம்மை ஒருவரை மட்டுமன்றோ வரச் சொன்னோம். இவர்களைக் கொண்டு வருவானேன்?” என்று கேட்டார் நம்பி.

“தேவரீர் தண்டும் பவித்திரமுமாக அன்றோ வரச் சொல்லியுள்ளீர்? இவர்களை தண்டும் பவித்திரமும் என்றே கொண்டு வந்தேன்” என்று விளக்கினார் உடையவர்.

நம்பியும் “தண்டு ஆர், பவித்திரம் ஆர்?” என்று கேட்க, முதலியாண்டானைக் காட்டி இவர் த்ரிதண்டம், கூரத்தாழ்வானைக் காட்டி, இவர் பவித்திரம் என்றார்.

அப்படியானால் அவர்கள் தவிர வேறு எவருக்கும் இவ்வர்த்தம் சொல்லலாகாது என்று நியமித்து, நலம் தரும் சொல்லை உபதேசித்தார். பிரணவத்தின் ஆழ்பொருள், எட்டெழுத்தின் செம்பொருள் விரிபொருள் அனைத்தும் நெஞ்சில் பட்டவுடன் உடையவரின் உள்ளம், உடல் எல்லாம் பூரித்து உற்சாகம் மேலிட்டது.

## விரிந்த உள்ளம்

இவ்வளவு பொருள் நிறைந்து ஆத்ம க்ஷேமத்துக்கு ஊற்றுக்கண்ணாய் புதைந்து கிடக்கும் ஞான பொக்கிஷமான திருமந்திரத்தை, பிறர் செவிப்படாமல் மறைத்து வைப்பானேன்? மறைபொருளை நாம் திரையிட்டு மறைப்பானேன்? சர்வாதிகாரமான (எல்லார்க்கும் உரியதான) அனைவரும் அறிந்து உய்வதற்குரியதான, அரு பொருளை ஆசை உடையோர்க்கு அளிப்பதில் தடையென்ன?

எவ்வளவு ஆர்த்தியோடு, பணிந்து வேண்டி விடாமல் தொடர்ந்து முயன்று, பரீட்சை பல தேறி இவ்வர்த்தம் கிடைக்காமல் இவ்வாசார்யனிடம் அடியேனே பதினெட்டு முறை நடக்க நேரிட்டதே. இவ்வுலகில் இதன் பெருமை அறிவார் யார்? ஸம்ஸாரமாகிற பெருங்கடலில் விழுந்து நோவுபடும் இவர்கள் கரையேறுவது எங்ஙனம்? இவர்களுக்கு விடிவு தான் எப்போது? ஐயோ! எம்பெருமானுக்கே உரிய இவர்கள் பிறர்க்குரியராகி அனர்த்தப் படுவானேன்? வாழ்ந்து போக வேண்டியர்கள் தாழ்ந்து போவானேன்? என்றெல்லாம் எண்ணினார்.

கருணைப் பெருக்கெடுத்து பிறவித்துயரில் தவிக்கும் ஆத்மாக்கள் உய்யும் வண்ணம், இதனை விரும்புவோர்க்கெல்லாம் உபதேசித்தால் என்? என்று எண்ணினார்.

உடனே ஊரார்க்கெல்லாம் தெரிவித்தார்; ஆத்மக்ஷேமத்தில் ஆசையுடையோர் எல்லோரும் வாருங்கள் என அழைப்பு விடுத்தார். திருக்கோட்டியூர் கோபுரத்தின் தென்புறமுள்ள தெற்காழ்வார் திருவோலகத்தில் அநேக ஸ்ரீ வைஷ்ணவர்கள் விரைந்து வந்து கூடினர்.

உலகம் உய்யப் பிறந்த உடையவர் திருமந்திரத்தின் சீரிய பொருளை துவயத்துடன் வெளியிட்டு அருளினார்.

இச்செய்தி பரபரப்புடன் ஊரெங்கும் பரவிற்று. கோஷ்டிபுரத்து நம்பிக்குத் தெரிந்து, உடையவருக்கு உடனே ஆள் அனுப்பி அவரை வரவழைத்தார்.

யதிராஜர் நம்பியிடம் சென்று தண்டனிட்டார். அடியார் பெருங்கூட்டமும் பின் தொடர்ந்து நின்றது.

## எம்பெருமானார் தரிசனம்

"இந்தப் பரம ரகஸ்யத்தை வேறு ஒருவர்க்கும் சொல்லாதே; கொள்ளும் என்றல்லவா நாம் உமக்குச் சொன்னோம்; அதை மதியாது நீர் அநேகம் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குச் சொன்னீர் என்று கேட்டோமே" என நம்பி வினவ, உடையவரும் "உண்மை தேவரீர் திருவடிகளை முன்னிட்டுக் கொண்டு சொன்னேன்" என்றார்.

"ஒருவர்க்கும் சொல்ல வேண்டா" என்று நியமித்தன்றோ சொன்னோம். அத்தை மறுத்துச் சொன்ன உமக்கு ஏற்படும் விளைவு ஏது தெரியுமா என்று நம்பி கேட்க,

"ஆசார்ய நியமனத்தை மறுத்த எனக்கு நரகமே கிட்டும்" என்றார் உடையவர்.

"இதனை அறிந்திருந்தும் சொல்வானேன்?" என்று கேட்டார் நம்பி.

"அடியேன் ஒருவனேயன்றோ நரகம் புகுவது; தேவரீர், திருவடிகளை முன்னிட்டுக் கொண்டு சொல்லுகையாலே, இவ்வாத்ம கோடிகள் எல்லாம் தேவரீர் திருவடி ஸம்பந்தத்தாலே உஜ்ஜீவிப்பார்கள் என்று சொன்னேன்" - இது உடையவர் பதில்.

இந்தப் பதிலைக் கேட்ட நம்பி, அயர்ந்து நின்றார். இத்தகைய பரந்த உள்ளம் நமக்குக் கூடிற்றில்லையே என்று எண்ணி "காரேய் கருணை

இராமானுசா, ஆரே அறிவர் நின் அருளின் தன்மை'' என்பதற்கு ஏற்ப, அவரது விரிந்த இதயத்தையும், பிறர் வாழ்வில் விருப்பினையும் போர உகந்தருளி உடையவரை வாரியணைத்து ''வாரீர் எம்பெருமானாரே - அவரோ நீர்'' இதுவரை நம் தரிசனம் பரம வைதிக ஸித்தாந்தம் என்று இருந்தது. இன்று முதல் ''எம்பெருமானார் தரிசனம்'' என்னுங்கோள். ''இதுவே அரங்கன் திருவுளம்'' என்று அருளிச் செய்தார் திருக்கோட்டியூர் நம்பி.

## மெய்ம்மைப் பெருவார்த்தை

பிறகு தனிமையில் உடையவரை அழைத்து, ''தேவரீருக்கு இன்னும் ஒரு பரம ரகஸ்யார்த்தம் சொல்ல எண்ணியிருந்தேன். நீரோ இத்துடன் திருப்தியடைந்து விட்டீரே'' என்று சொல்லி நிறுத்தினார் நம்பி.

''தேவரீர் இப்போது அருளிச் செய்த அர்த்தத்துக்கு மேலான ஒரு அர்த்தம் உண்டு என்று எங்ஙனம் எண்ணியிருக்க முடியும்? அவ்விதம் நினைத்தால், அது எனது விசுவாசக் குறையை அன்றோ எடுத்துக் காட்டும். ஸ்வாமி அருளிய அர்த்ததில் பூரண விசுவாசத்தாலேயே ஆறியிருந்தேன். எப்போதும் ஸ்வாமி திருவாக்கிலிருந்து வருமவற்றைப் பருக ஆர்வத்தோடு எதிர்நோக்குமவன் அடியேன்'' என்றார் எம்பெருமானார்.

'அப்படியாகில், இப்போது போய் ஒருவருமே தனியாக எம்மிடம் வாரும்' என்று பணித்தார் நம்பி.

மறுநாள் எம்பெருமானார் நம்பியின் ஆணைப்படி தனித்துச் சென்று தண்டனிட்டார். நம்பியும் இவர் கையைப் பற்றிக் கொண்டு ஏகாந்தமான இடம் சென்று, திருமாளிகையின் மேல்தளத்தில் படிக்கதவைத் தாளிட்டு, ஒருவருக்கும் சொல்லாதபடி தம் திருவடிகளைத் தொடுவித்துச் சூளரவு கொண்டு ''நெறியெல்லாம் எடுத்துரைத்த நிறை ஞானத்து ஒரு மூர்த்தி, கீதாசார்யனின் மெய்ம்மைப் பெருவார்த்தை'' - சரமச்லோகப் பொருளைக் கூறினார்.

எம்பெருமானாருக்கு ஆசார்யனிடமிருந்து தாமே உவந்து கிடைத்த முதற் பரிசு மாயன் அன்று அறுதியிட்டு ஓதிய இறுதி வாக்கு.

மந்திரப் பொருளும், திருத்தேர்த்தட்டு வார்த்தையின் மெய்ம்மைப் பொருளும் உணர்ந்த எம்பெருமானார் முன்னிலும் பன் மடங்கு புகழோடு ஸ்ரீரங்கம் திரும்பினார். திருக்கோட்டியூர் நம்பி, தம் குமாரர் தெற்காழ்வானையும் எம்பெருமானார் திருவடிகளில் சேர்ப்பித்தார்.

## ஆழ்வானும் - ஆண்டானும்

ஸ்ரீரங்கத்தில் ஆழ்வானும், ஆண்டானும் எம்பெருமானாரை தண்டனிட்டு நின்றபோது, "ஆளவந்தார் நம்மை விசேஷ கடாக்ஷம் பண்ணி, பேரருளாளனை நோக்கி பிரபத்தி பண்ணி அருளினது பலனுள்ளதாம் படி நம்பி நம்மை வாழ்வித்தருளினார் கண்டீரோ?" என்று மகிழ்ந்து கூறி, ஒரு வருஷம் உம்மைக் குற்றவேல் கொண்டபின் சரமச்லோகப் பொருளை உமக்கு உபதேசிக்கப் பணித்தார் நம்பி என்பதையும் வெளியிட்டார்.

உடனே ஆழ்வான் எம்பெருமானார் திருவடிகளில் விழுந்து நிலையற்ற இவ்வுடலை ஓராண்டு நிலைக்கும் என்று எப்படி நம்புவது? ஒரு ஆண்டு "தொண்டுக்குப் பதில் ஒரு மாத உபவாஸம்" என்ற ஒரு சாஸ்திர நியமம் உண்டு. அடியேனுக்கு ஒரு மாத உபவாசம் விதித்து, கீதாசார்யன் அறுதியிட்ட இறுதிப் பொருளை உபதேசித்து அருள வேண்டும் என்று பிரார்த்தித்தார் ஆழ்வான்.

ஆழ்வானுக்கு அருளியது கேட்டு, முதலியாண்டானும் அவ்வாறே தமக்கும் நல்கியருளும்படி வேண்ட, எம்பெருமானார் ஆழ்வானுக்கு மட்டுமே என்னிடம் கேட்க அனுமதி தந்தார். நீர் நம்பியிடம் சென்று கேளும் என்றார் உடையவர்.

முதலியாண்டான் நம்பியிடம் ஆர்வத்துடன் விரைந்தோடினார். ஆறு மாதம் மன்றாடினானர். "கல்வி, செல்வம், குலம் இவை காரணமாக வரும் முக்குறும்பும் போனால், எம்பெருமானார் தாமே உமக்கு அருளுவார். செல்லும்". என்று விடைகொடுத்து அனுப்பிவிட்டார். பின்னர் ஆழ்வானும், ஆண்டானும் எம்பெருமானாரிடம் அணுக்காராயிருந்து, குற்றவேல் புரிந்து உரிய காலத்தில் உயரிய அர்த்தங்களைப் பெற்றனர்.

## திருமாலை ஆண்டான்

ஸ்ரீரங்கத்தில் "எம்பெருமானார் தரிசனம் எதிரொலித்தது" வளர்ந்தது. அப்போது அரங்கனைச் சேவிக்க வந்த திருக்கோட்டியூர் நம்பி, பரமாசார்யர் ஆளவந்தாரின் சிஷ்யருள் ஒருவரான, திருமாலையாண்டானையும் தம்முடன் அழைத்து வந்து, உடையவர் மடத்துக்கு எழுந்தருளினார்.

திருமாலையாண்டான் திருமாலிருஞ்சோலையைச் சேர்ந்தவர். மாலாதரர் என்பர். உடையவர் திருக்கோட்டியூர் நம்பியை தண்டனிட்டு, உகப்புடன் வரவேற்று நின்றார். நம்பி எம் பெருமானாரைக் குளிர நோக்கி, "திருமாலையாண்டானின் பக்கலில் திருவாய் மொழிக்கு நீர் அர்த்தம்

கேட்க வேண்டும். அதற்காக அவரையும் அழைத்து வந்துள்ளேன்'' என்று நியமித்து அவர் திருக்கையிலே உடையவரை ஒப்படைத்து தாம் திருக்கோட்டியூருக்குத் திரும்பி விட்டார்.

## திருவாய்மொழி உரை நயம்

உடையவர் மடத்தில் திருமாலையாண்டவனின் திருவாய்மொழி காலக்ஷேபம் தொடங்கி, பாசுரம் பாசுரமாக உரையருளிச் செய்து, ஆங்காங்கே ஆளவந்தார் காட்டியருளிய நிர்வாஹங்களை எடுத்துக் கூறி வந்தார்.

**''அறியாக்காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து**
**அறியா மாமாயத்து அடியேனை வைத்தாயால்''**

என்ற திருவாய்மொழி பாசுரத்துக்கு உரை அருளிச் செய்கையில், அறிவு நடையாடாத தசையிலே ஸம்பந்த ஞானத்தைப் பிறப்பித்து, பிறந்த ஞானத்தை அழிக்கக் கடவதான தேஹ ஸம்பந்தத்தோடே பின்னையும் வைத்தாய் என்கிற இழவாலே சொல்லுகிறார் - என்று ஆளவந்தார் அருளிச் செய்ததாக, திருமாலையாண்டான் பணித்த போது,

எம்பெருமானார் கேட்டருளி, ''முன் பாட்டுக்களும் பின்னால் வரும் பாட்டுக்களும் ப்ரீதியோடு பகவானைக் கொண்டாடும் போது, நடுவே இப்பாட்டில் அப்ரீதி தோற்றச் சொல்லுவது சேராது''.

ஆகவே

**அறியா மா மாயத்து அடியேனை**
**அறியாக் காலத்துள்ளே அடிமைக் கண்**
**அன்பு செய்வித்து வைத்தாயால்**

என்கிறார் என்று இத்தையும் ஓர் உபகாரமாக்கி அருளிச் செய்தார் ஆழ்வார் என்று நிர்வஹிக்கலாமே என்றார் எம்பெருமானார்.

இதைக் கேட்ட திருமாலையாண்டவன் ''இது விசுவாமித்திர சிருஷ்டி, ஆளவந்தார் அருளிச் செய்யக் கேட்டிலோம்'' என்று கூறி உமக்குத் திருவாய்மொழி சொல்வதை நான் இன்று தொட்டு நிறுத்தி விடுகிறேன் என்று கூறி நிறுத்தியும் விட்டார்.

திருக்கோட்டியூர் நம்பிக்கு இச்செய்தி தெரிந்து உடனே, ஸ்ரீரங்கம் எழுந்தருளி திருமாலையாண்டானிடம் சென்று, எம்பெருமானாருக்குத் திருவாய்மொழிப் பாடம் நடக்கிறதோ? என்று கேட்க, ''அடியேன்

ஆளவந்தார் பக்கல் கேட்ட அர்த்தமொழிய, இவர் வேறே சில அர்த்தங்களை தமக்குத் தோற்றியதைச் சொல்லுகையால், அடியேன் சொல்லுவதை நிறுத்திவிட்டேன்'' என்றார்.

அவர் சொன்னது என்ன? என்று கேட்க, ஆண்டான் ''அறியாக் காலத்துள்ளே என்கிற பாட்டுக்கு உபகார ஸ்மிருதியாக வேணும் என்கிறார் இவர்'' என்ன, ''இவ்விருத்தமும் ஆளவந்தார் அருளிச் செய்ய, நாம் கேட்டிருக்கின்றோம்'' என்று நம்பி கூறி, ''ஸாந்தீபினியிடம் கிருஷ்ணன் வேத அத்யயனம் பண்ணினாற்போலே காணும் உம்மிடம் எம்பெருமானார் திருவாய்மொழி கேட்கிறது; ஆளவந்தார் திருவுள்ளத்திலுள்ள அர்த்தம் தவிர்த்து இவர்க்கு வேறொன்றும் தோன்றாது; இவருக்குத் தெரியாவற்றைத் தெரிவிப்பதாக எண்ணிவிடாதீர்'' என்று எச்சரித்து. திருமலையாண்டானுடன் பெரிய நம்பியையும் கூட்டிக் கொண்டு எம்பெருமானிடம் சென்று, ''விட்ட இடத்திலிருந்து மீண்டும் தொடங்கி திருவாய்மொழிப் பிரபந்தத்தைத் தலைக்கட்டும்'' என்று பணித்தார்.

பிள்ளையும், திருவாய்வாழ் மொழி உரை நடைபெற்று வருகையில், மீண்டும் ஓர் இடத்தில் திருமாலையாண்டான் கூறியதை மறுத்து, ''ஆளவந்தார் இப்படி அருளிச் செய்யார்'' என்று உடையவர் விண்ணப்பம் செய்ய, ஆண்டானும் நீர் ஆளவந்தாரைக் கண்ணிலும் காணாதிருக்க, இப்படி அருளிச் செய்யார் என்கிறீரே இது எப்படி?, என்று கேட்டார்.

''அடியேன் ஆளவந்தாருக்கு ஏகலைவனன்றோ'' என்று தெரிவித்தார் எம்பெருமானார். 'திருக்கோட்டியூர் நம்பி, நமக்கு உரைத்தது ஒத்திருந்தது. இதுவும் ஒரு திரு அவதாரம், ஆளவந்தார் பக்கல் கேளாத அர்த்தமெல்லாம் இங்கே கேட்கப் பெற்றோம்' என்று இவரை தண்டனிட்டார். இவருக்கு ''சடகோபன் பொன்னடி'' என்று திருநாமம் சூட்டினார் தம்முடைய குமாரர் சுந்தரத்தோளுடையாரையும் எம்பெருமானார் திருவடிகளைப் பற்றும்படி செய்தார்.

இப்படி எம்பெருமானார் ஆளவந்தாரின் அருளைப் பெற்று அவரது சிஷ்யர்களிடமிருந்து, அவர் தமக்கென விட்டுச் சென்ற ஞானச்செல்வத்தை தேடிப் பிடித்துச் சேர்த்துக் கொண்டு வந்தார். அதைத் தொடர்ந்து சிஷ்யச் செல்வமும் வளர்ந்து வந்தது.

## திருவரங்கப் பெருமாள் அரையர்

திருவாய்மொழி முற்றுப் பெற்றதும் பெரிய நம்பி எம்பெருமானாரைப்

பார்த்து, ஆளந்தாரின் திருக்குமாரர் ''ஆழ்வார் திருவரங்கப் பெருமான் அரையரிடம் இன்னும் ஓர் அர்த்த விசேஷம் உண்டு. அதனை அவரிடம் கேளும்'' என்றார்.

உடையவர் அன்று முதல் ஆறு மாதங்களுக்குத் தினமும் பால் அமுது காய்ச்சி அரையருக்குச் சமர்ப்பித்து, அவர் உகப்பைப் பெற்றார். திருவத்யயன உற்சவ காலங்களில் அரையர் திருமேனிக்குப் பொருத்தமாக மஞ்சள் காப்பு அரைத்து சமர்ப்பித்து வந்தார்.

ஒருநாள் நீராடும் போது, அவர் திருமேனிக்கு பாங்கல்லாத மஞ்சள் காப்பை விலக்கி, மீண்டும் புதிதாக மஞ்சள் காப்பு அரைத்து நீராடப் பண்ணினார். அதுகண்டு அது உகந்து ''வாரீர் எம்பெருமானாரே! என்னிடமுள்ள அருஞ்செல்வத்தைக் கொள்ளை கொள்ள எண்ணிவிட்டீர். சொல்லுகிறோம் கேளும்'' என்றார் அரையர். ''தேவுமற்றறியாத ஸ்ரீ மதுரகவிகள் போலே'' நீரும்,

**குருரேவ பரம் பிரஹ்ம, குருரேவ பரம் தனம்**
**குருரேவ பர; காமோ குருரேவ பராயணம்**
**குருரேவ பராவித்யா குருரேவ பராகதி**
**யஸ்மாத் தது ப தேஷ்டாஸௌ தஸ்மாத் குருதரோகுரு:**

(குருவே மேலான பிரம்மம், மேலான தனம், காமம், உத்தம புருஷார்த்தம், உயர்கல்வி, உய்வுபாயம், அப்பரம்பொருளை உபதேசிப்பதால் அதைக் காட்டிலும் உயர்ந்தவர் குருவே)

என்று சொல்லுகின்றபடியே ''தீ மனம் கெடுத்தும், மருவித் தொழும் மனம் தந்தும், அறியாதன அறிவித்த ஆசார்யனே உபாயம்; உபேயம்'' என்று விசுவஸித்து ஆசார்யஸ் ஸ ஹரிஸ் ஸாக்ஷாத் சரரூபி ந சம்சய:'' (ஆசார்யனே நேரே நடமாடும் பரமபுருஷன்; இதில் ஐயமில்லை ''பீதகவாடைப் பிரானார் பிரம குருவாகி வந்து'' என்கிற படி ''உறங்கும் பெருமான் தானே உலவும் பெருமாளாய் வந்தார் என்று இரும்'' என்று பஞ்சம (ஐந்தாவது) உபாய நிஷ்டையான சரமபர்வ அர்த்த விசேஷத்தை அருளினார். (கர்ம, ஞான, பக்தி, பிரபத்தி என்பவை மற்ற நான்கு உபாயங்கள்)

அரையர் நமது தம்பியான சொட்டை நம்பியை உடையவர் திருவடிகளைப் பற்றச் செய்தார்.

## ஐந்து ஆசிரியர்களுக்கு ஒரு சிஷ்யர்

எம்பெருமானாருக்கு ஏற்ற குரு ஆளவந்தார் ஒருவரே. உடையவர் நேரே ஆளவந்தாரிடம் பெற வேண்டியவைகளைப் பெற முடியாமற் போனதால், அவரது சிஷ்யர்கள் ஐவரிடமும் கேட்கலாயிற்று. இவ்வைந்து குருக்களிடமும் ஒவ்வோர் அர்த்தமே விசேஷமாயிருந்தது. ஆனால் எம்பெருமானாருக்கோ எல்லா அர்த்தங்களும் ஒருங்கு கிட்டியது.

## கத்ய த்ரயம்

பூலோக வைகுண்டம் என்று புகழ் பெற்ற திருவரங்கம் பெரிய கோயிலில் ஒரு பங்குனி உத்திரத் திருநாளில் பெருமாளும் நாச்சியாரும் ஏக சிம்மாசனத்தில் எழுந்தருளியிருக்கும் போது, இதுவே தக்க தருணம் எனக்கருதி எம்பெருமானரின் கருணை உள்ளம் உலகத்தார் உய்வு பெறும் வண்ணம், பிராட்டியை முன்னிட்டு அரங்கனிடம் முறைப்படி சரணாகதி செய்யத் தூண்டியது.

**"யோ பிரஹ்மாணம் விததாதி பூர்வம்**
**யோவை வேதாம்ச பிரஹிணோதி தஸ்மை**
**தம்ஸ தேவம், ஆத்ம புத்திப்ரகாசம்**
**முமுக்ஷுர்வை சரணம் அஹம் பிரபத்யே"**

என்று வேத புருஷன், உலகுக்கு மோக்ஷ உபாயமாக பக்தியைப் பொதுவாக உபதேசித்தாலும், ஜீவ சொரூபத்துக்கு பக்தியோகம் முரண்படுகிறபடியாலும், தகுதிகளைப் பெறுவது அரிதாகையாலும், அதைவிட எளிய வழி, சொரூபத்துக்கு ஏற்ற வழி சரணாகதி என்பது கருதி, அதைத்தன் அநுஷ்டானத்தில் காட்டினான். அதே போல் வேதாந்தார்த்தம் அறுதியிட இவ்வுலகில் அவதரித்த இராமாநுஜரும் வேத நூல்கள் கூறும் பக்தியைப் போலவே, அனுஷ்டானத்துக்கு ஏற்ற சரணாகதியும் மஹா விசுவாசமுள்ளவர்க்கே கார்யகரமாகையாலும், அநேக தகுதிகளை எதிர்பார்க்கையாலும், அன்பு நெறியைப் போல், இந்த நம்பிக்கை நெறியும் அரிய வழியாகக் கருதி, உலகோர் உய்ய அதினிலும் எளிய வழியை அவரது கருணை உள்ளம் நாடியது. அதன் விளைவே இச்சரணாகதி - பிடித்தாரைப் பிடித்து நிற்கும் எளிய வழி.

**ஞானம் கனிந்த நலம் கொண்டு - நாள்தொறும் நைபவர்க்கு**
**வானம் கொடுப்பது மாதவன் - வல்வினையேன் மனத்தில்**
**ஈனம் கடிந்த இராமாநுசன் தன்னை எய்தினர்க்கு அத்**
**தானம் கொடுப்பது தன் தகவு என்னும் சரண் கொடுத்தே**

அமுதனார்

எம்பெருமானையும் விடுத்து எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம் என்று பற்றுவதே சரம உபாயமாயிற்று. இந்த எளிய வழியைப் பற்ற ஏராளமானவர்கள் ஸ்ரீரங்கம் வந்து கூடினர். இச்சரணாகதியில் "பொன்னுலகாளீரோ! புவன முழுதாளீரோ!" என்று உபய விபூதியும் எம்பெருமானார் இட்ட வழக்காயிற்று. சரணாகதி கத்யம், ஸ்ரீரங்ககத்யம், வைகுண்ட கத்யம் மூன்றும் இச்சமயத்தில் அவர் திருவாக்கிலிருந்து வெளிவந்தன. திருவாராதன முறையை விளக்கி "நித்யம்" என்னும் ஒரு சிறு நூலையும் உடையவர் அருளிச் செய்தார்.

## சீதன வெள்ளாட்டி

அப்போது எம்பெருமானாரின் ஆசார்யர் பெரிய நம்பிக்கு அத்துழாய் என்று ஒரு குமாரத்தி; அவளை விவாகம் செய்து புக்ககம் அனுப்பினார் நம்பி. புக்ககத்தில் அத்துழாய் நீராடப் போகையில் ஒருநாள் மாமியாரைத் துணைக்கு வரவேண்டினாள். மாமியார் சீற்றம் கொண்டு, உனக்கு யாராவது சீதன வெள்ளாட்டி வந்திருந்தால் கூட்டிக் கொண்டு போகலாமே என்று ஏளனமாகக் கூறினாள்.

அந்நாளில் பெண்ணைக் கொடுப்போர் சீர் சிறப்போடு, ஒரு சீதன வெள்ளாட்டியும் (பணிப் பெண்) அனுப்புவது வழக்கம். பெரிய நம்பிக்கு அதற்கு வக்கு இல்லை என்று குத்திக் காட்ட இப்படிப் பேசினாள் மாமியார். அத்துழாய்க்கு தன் தகப்பனாரின் ஏழ்மை நிலையை குத்தலாகக் குறிப்பிட்டு மாமியார் பேசியது பொறுக்கவில்லை.

தகப்பனாரிடம் வந்து தெரிவித்தாள். வழக்கம் போல் அவர் எதுவானாலும் உங்கள் ஜீயரிடம் சென்று சொல் என்றார். எம்பெருமானாருக்கு விஷயம் எட்டினதும் உடனே அருகில் இருந்த முதலியாண்டானை அழைத்து "நீரே அத்துழாய்க்கு சீதன வெள்ளாட்டி; அவளுடன் சென்று வாரும்" என்று நியமித்தார்.

முதலியாண்டான் அத்துழாயின் பணிப்பெண்ணாக அவளது மாமியார் வீடு சென்று குற்றவேல் புரிந்தார்; அரங்கன் கோயில் மணியமாகப் பணிபுரியும் பரம பாகவதர். உலகம் புகழும் எம்பெருமானாரின் முக்கோல் போன்ற முதலியாண்டானோ, நமக்கு ஏவல் செய்வது? மகாபாவம், அபசாரம் என்று சொல்லி உடனே அந்த மாமியார் எம்பெருமானாரிடம் ஓடி திருவடிகளில் விழுந்து மன்னிப்பு வேண்டினாள். முதலியாண்டானைத் திருப்பி அழைத்துக் கொள்ள சம்மதித்தார் உடையவர்.

## திருப்பாவை ஜீயர்

எம்பெருமானார் பெரிய பெருமாள் நியமனத்தால் உபய விபூதி செல்வத்துக்கும் உடையவர் என்ற சிறப்பு பெற்றிருந்தாலும் தாம் மேற்கொண்டிருந்த சந்நியாஸ ஆசிரமத்துக்குச் சேர, தினமும் ஏழு இல்லங்களுக்குச் சென்று பிக்ஷை எடுத்து அதை புசித்துப் பசியாற்றி வந்தார்.

அவ்வாறு "மாதுகரத்" துக்கு வீதியில் செல்லுகையில் திருப்பாவை பாடிச் செல்வது ஜீயர் வழக்கம். அன்று பெரிய நம்பி திருமாளிகை வாயிலில் வரும் போது "உந்து மதகளிற்றன்" என்னும் பாசுரத்தின் கடைசி வரிகளை அநுஸந்தித்துக் கொண்டே, அதன் பொருளில் ஆழ்ந்த வண்ணம் நின்றார்.

**"பந்தார் விரலி உன் மைத்துனன் பேர் பாட**
***செந்தாமரைக்கையால் சீரார் வளையொலிப்ப***"

என்று அவர் கூறவும், அப்போதே தாளை உருவிக் கதவைத் திறந்து அத்துழாய் பிக்ஷையிடவும் சரியாயிருந்தது. ஜீயரோ தன் அகக்கண் காட்சிக்கு ஏற்ப "நம்பின்னை பிராட்டியே நேரில் வந்து கதவைத் திறப்பதாகக் கருதி" விட்டார். உடனே அத்துழாயின் பாதங்களில் விழுந்து தண்டனிட்டார்.

அத்துழாய் ஒன்றும் புரியாமல் ஜீயர் தன்னை தண்டனிட்டது கண்டு திடுக்கிட்டு உள்ளே ஓடி தகப்பனார் நம்பியிடம் நடந்ததைப் பரபரப்புடன் சொன்னாள்.

நம்பியும் நிதானமாக, "உந்து மத களிற்றன்", அநுஸந்தித்தாரோ ஜீயர் என்று கேட்டு திருப்பாவையில் ஜீயர் ஆழ்ந்துவிட்ட அநுபவத்தைக் கண்டு வியந்தார். அன்று முதல் இராமாநுஜருக்கு **'திருப்பாவை ஜீயர்'** என்ற பெயரும் ஏற்பட்டது.

## மாறனேரி நம்பி

ஆளவந்தார் சிஷ்யருள் மிகத் தாழ்ந்த வகுப்பினர் (பள்ளக்குடி) மாறனேரி நம்பியும் ஒருவர். அவர் பாண்டிய நாட்டினர். "மாறன்நேர் நம்பி" என்பதும் உண்டு. இதற்கு மாறனை - நம்மாழ்வாரை நிகர்த்த பூரணர் என்பது பொருள். மாறன் ஏரி என்னும் ஊரைச் சேர்ந்தவராதலால் அப்பெயர் வந்தது என்பர்.

ஆளவந்தாரிடம் அளவற்ற பக்தி கொண்டு தீதில் நன்னெறியான திருமால் நெறியில் வாழ்ந்தவர், முதிர்ந்த வயதினர். பெரிய நம்பிக்கு அவரிடம் அளவற்ற அன்பு. பெரிய நம்பியின் குமாரத்தி அத்துழாயும் அப்பெரியவரிடம் பேரன்பு பூண்டிருந்தாள்.

மாறனேரி நம்பி சேரிக்கு வெளியில் ஊருக்கு அப்பால் தனிக்குடில் அமைத்து வசித்தார். அவருக்கு ராஜரணம் என்னும் பிளவை நோய் கண்டது. நோயுற்ற அவருக்கு பெரிய நம்பி உணவு முதலியன கொடுத்து உதவினார்.

ஒருநாள் இரவு உணவு கொடுக்க பெரிய நம்பி, மாறனேரி நம்பியின் குடிசைக்குச் சென்றபோது, அவருக்குத் தெரியாமல் சிஷ்யர் எம்பெருமானார் அவரைப் பின் தொடர்ந்தார்.

குடிலுக்குள் சென்ற பெரிய நம்பி மாறனேரி நம்பியின் புண்ணைக் கழுவி நீராடச் செய்து, உடுத்தி, உணவருந்தச் செய்து, "ஆளவந்தார் திருவடிகளே சரணம்" என்று கூறி அவர் களைப்பாறத் தொடங்கியதும் வீட்டுக்குத் திரும்பினார்

நம்பி புறப்படும் முன் இராமானுஜர் முந்தி விலகிச் சென்றார். இரவு நிலவில் அவர் அழகுத் திருமேனி நன்கு புலனாயிற்று. காவியுடையும், கம்பீர நடையும் தொலைவில் சென்று மறைந்தது. இராமானுஜர் தாம் நம்மைக் கவனித்துச் செல்கிறார் என்று கண்டு கொண்டார் பெரிய நம்பி.

சில நாட்களில் மாறனேரி நம்பி திருநாடு அலங்கரித்தார். அப்போது உத்தம பாகவதர்களுக்கு - அந்தணனுக்கு - அந்தணன் - செய்ய வேண்டிய - இறுதி கைங்கர்யத்தை "பிரம்ம மேத" ஸம்ஸ்காரத்தைச் செய்தார்.

இது குறித்து திருவரங்கத்தில் வைதிகர்களிடை பெரும் புகைச்சல் கிளம்பியது. அந்தணருக்கு உரியதை பஞ்சமருக்குச் செய்யலாமோ? - என்று கேட்டுப் பலர் வம்புக்கு வந்தனர். "உடையவரே உம் ஆசார்யன் செயல் உமக்கு சம்மதமோ" என்றனர்.

இராமானுஜர் ஊரார் புகாரைப் பெரிய நம்பியிடம் கூறினார். பெரிய நம்பி "வாரீர்" பெரும்பூதூர் மாமுனியே! இராமபிரான் பெரிய உடையாருக்கு (ஜடாயுவுக்கு) இதே மாதிரி கிரியை செய்யவில்லையா? ராமனைக் காட்டிலும் நான் உயர்ந்தவனோ? சடாயுவைக் காட்டிலும் மாறனேரி நம்பி தாழ்ந்தவரோ? பணிப் பெண்ணின் புதல்வன் விதுரர்; அவருக்கு தர்மபுத்திரர் "பிரம்ம மேதம்" செய்தார். தருமனைக் காட்டில் நான்

சிறந்தவனோ? விதுரரை விட மாறனேரி நம்பி தாழ்ந்தவரோ? ஆழ்வார்களின் திருவுள்ளம் அறியாதவரோ நீர்? என்று திருப்பிக் கேட்டார்.

பதில் ஒன்றும் சொல்லாமல் உடையவர் திரும்பி விட்டார். ஊரார் பெரிய நம்பியின் செயலை வெறுத்து அவர் வீட்டின் முன் முள்ளைப் போட்டு அடைத்து அவரை ஒதுக்கி வைத்தனர்.

“பின்னால் ஒருநாள் பெருமாள் தேரில், அவ்வீதியில், எழுந்தருளிய போது, அத்துழாய் ஆணையிட்டு அரங்கனை நிறுத்தி நியாயம் வழங்கக் கோரி, ஊரார் செயலைக் கண்டித்துத் தடைகளை அரங்கனைக் கொண்டு நீக்கினாள்”

## கொங்குப்பிராட்டி

ஸ்ரீ ராமானுஜரின் ஸ்ரீ வைஷ்ணவ பிரசாரத்துக்கு வேகமும் ஆற்றலும் அதிகரித்து, பல நாடுகளிலிருந்து பக்தர்கள் வந்து அடிபணிந்தனர். கொங்கு நாட்டிலிருந்து ஒரு பெண்மணி தன் கணவனுடன் வந்து ஸ்ரீரங்கத்தில் தங்கினாள். ‘மாதுகரத்துக்கு’ வரும் ஜீயரை, நோக்கி “உலகம் நிறைந்த புகழாளர் அரங்கன் செல்வத்துக்கு உடையவர், நீர் பிக்ஷை ஏந்திப் புசிப்பதும், உம் திருவடிகளில் அரசர்களும் மண்டியிடுவதும் பொருத்தமாயில்லையே” என்றாள்.

அவளுக்கு சமாதானம் ஏற்படும் வகையில் “எம் பெருமான் அருளிச் செய்த நல்வார்த்தைகளின் மகிமை அதுதான். அதுபற்றி மடத்துக்கு வந்தால் தெரிவிக்கிறேன்” என்றார்.

பிறகு கொங்குப் பிராட்டியும் மடத்துக்குச் சென்று இராமாநுஜரிடம் பஞ்ச சம்ஸ்காரம் பெற்று; ரகஸ்யத்ரயம் (திருமந்திரம் துவயம், சரமச்லோகம்) உபதேசம் கொண்டு அவரது திருவடி நிலைகளைப் பிரார்த்தித்துப் பெற்று பரமபக்தியுடன் அவர் திருமேனி புகரைத் தன் உள்ளத்தில் தேக்கிக் கொண்டு, “கொள்ளைக்களம்”என்னும் தன் ஊருக்குத் திரும்பினார்.

## உணவில் விஷம்

வடக்கிலிருந்து வந்து இராமாநுஜர் ஸ்ரீரங்கத்தில் ஆதிக்கம் பெற்று கோயில் நிர்வாகம் ஏற்று, பல புதிய சீர்திருத்தங்களைப் புகுத்தியதால், அவ்வூரார் என உரிமை கொண்டாடி, கோயிலை இஷ்டப்படி ஆண்டு அனுபவித்து வந்த சிலருக்கு, அவரிடம் மனத்தாங்கல் ஏற்பட்டது. பொதுமக்களின் பேராதரவும் அகளங்கன், வில்லிதாசர் போல்வார் ஆதரவும் பெற்றிருந்தால், எம்பெருமானாரை வெளிப்படையாக

எதிர்த்துக் கொள்ள மாட்டாமல் மனத்துள்ளே பகையை மறைத்தனர்; அப்பகை ஒரு புறம் கனிந்து வந்தது.

இராமாநுஜர் வழக்கமாக பிக்ஷை எடுத்து வரும் ஏழு வீடுகளில் ஒன்று அவரிடம் பகையுணர்வு மேலிட்ட கோயில் ஊழியர் ஒருவருடையது. ஸ்தானிகர் சிலர் கூடி, ஜீயர், அவர் வீட்டுக்கு பிக்ஷை வருகையில் உணவில் விஷத்தைக் கலந்து இடுவது என்று முடிவு செய்தனர்.

குறிப்பிட்டபடி நஞ்சு கலந்த அன்னத்தை மனமின்றி அவர் கலத்தில் இட்ட கோயில் ஊழியரின் மனைவி, முகத்தில் கலக்கத்தோடு வழக்கத்துக்கு மாறாக, கையைத் திருப்பி இட்டதையும் தண்டனிட்டுக் கண் கசக்கி கவிழ் தலையிட்டுச் சென்றதையும் கண்டு ஐயுற்றார் ஜீயர்.

காவிரிக்கரை சென்றதும், கலத்தில் விழுந்த அவ்வுணவை ஒதுக்கி, காக்கைக்கு வைத்தார். காக்கை தலை சுற்றி விழுந்தது. விஷ உணவை நீரில் கழுவி சில நாட்கள் பிக்ஷைக்கு போகாமல் பட்டினி கிடந்தார் எம்பெருமான்.

## கிடாம்பி ஆச்சான்

இச்செய்தி எங்கும் பரவி, திருக்கோட்டியூர் நம்பி ஓடோடி வந்தார். சிஷ்யர் குழாம் சுற்றி நிற்க, பட்டினியுடன் இராமாநுஜரைக் கண்டார். அப்போது நடுப்பகல், உச்சி வெயில் உடலை தகிக்கிறது; கால் கொப்பளிக்கும் காவிரி மணலில் விழுந்து ஆசார்யரை வணங்கினார் ஜீயர். கீழே விழுந்து கிடப்பவரை எழுந்திரு என்று கூறாமல் சிறிது தாமதித்தார் நம்பி.

கொதிக்கின்ற மணலில் ஜீயர் திருமேனி துவண்டு கருகுவதைக் கண்ட கிடாம்பி ஆச்சான் என்னும் சிஷ்யர் பொறுக்கமாட்டாமல், "இது என்ன ஆசார்ய சிஷ்யகிரமம்." "கருமுக மாலையைக் கருக விடுவாரோ?" என்று சினந்து கூறி, தாம் தரையில் விழுந்து, அவரது திருமேனியைத் தம் உடலால் தாங்கி நின்றார்.

இந்தச் செயலைக் கண்ணுற்ற நம்பி, "உம்மைத்தான் காணும் தேடுகிறோம். திருமேனிக்குப் பரிவார் உண்டோ என்றே காத்திருந்தோம் அதற்கு நீரே கடவீர் இன்று முதல் மடத்தில் தளிகை பண்ணி, நீரே இவருக்கு சாதியும்", என்று நியமித்தார்.

நஞ்சிட்டவரை ராமாநுஜர் தம் கருணையால் மன்னித்து, திருத்திவிட்டார். எம்பெருமானார் கருணைக்கு முன் எப்பகையும் தலை தூக்கியதில்லை!

## யஜ்ஞமூர்த்தி

ஸ்ரீரங்கத்தை தலைமையாகக் கொண்டு ஸ்ரீ வைஷ்ணவம் நாளுக்கு நாள் ஓங்கி வளருவது கண்டு பல சமயப் புலவரும் வாதப் போர் புரிந்து ராமாநுஜரை வீழ்த்த எண்ணினர். அவருள் ஒருவரே யஜ்ஞமூர்த்தி.

யஜ்ஞமூர்த்தி பிராம்மண குலத்தைச் சேர்ந்த மஹாவித்வான். காசிவரை விஜய யாத்திரை செய்து, வாதப் போரில் பலரையும் வென்று, விருதுடன் சன்மானங்கள் பெற்று சிஷ்யர்களுடன் ஸ்ரீரங்கம் வந்திருந்தார். எம்பெருமானார் வைபவம் அவர் செவியில் பட்டிருந்தது. உடையவரை வெல்வதால் தன் புகழ் உலகில் ஓங்கி நிற்கும் என்பது அவர் கருத்து.

கல்விச் செருக்குடன் வந்த புலவர் யஜ்ஞமூர்த்தி ஒரு முரட்டு வேதாந்தி. கோயில் கைங்கர்யத்தில் ஈடுபட்டிருந்த உடையவரை "என்னிடம் தர்க்கிக்க வாரும்" என்று அழைத்தார்.

## நிபந்தனை

வாதப்போருக்கு சளைக்காத இராமாநுஜரும் அதற்கு இசைந்தார். வாதிட வந்தவரை நோக்கி, "நாம் உம்மிடம் வாதிட்டு வென்றால், உமது தோல்வியை ஒப்புக் கொள்ளும் வகையில் நீர் என்ன செய்வீர்?" என்று வினவினார்.

எதிர் நின்ற யஜ்ஞமூர்த்தி "சொற்போரில் நான் தோற்றால், எனது மாயாவாத மதத்தை விடுத்து உமது விசிஷ்டாத்வைத தரிசனத்தைத் தழுவுவேன்; என்றும் உமது திருவடிகளைத் தலையில் சுமப்பேன்" என்றும் கூறி, "மாறாக நீர் தோற்றால் என்செய்வீர்" எனத் திருப்பிக் கேட்டார்.

அதற்குப் பதிலாக எம்பெருமானார் "இந்த ஸ்ரீ வைஷ்ணவ விசிஷ்டாத்வைத தரிசனம் அநாதியானது; நமது தர்க்கவாதங்களுக்கு அப்பாற்பட்டது; அவனருள் வயப்பட்டது. எனது வாதத்திறன் குறைவினால் நான் தோற்க நேரிட்டால்; அதற்காக இந்த ஸத்ய வாத மதத்தை நான் துறந்து விடத் துணியேன்; அதற்கேற்ப நூல் எழுதுவது; போன்ற பிரசாரப்பணிகளை விரட்டிடுவேன்" என்றார்.

## வாதப்போர்

தர்க்கத்துக்குப் பதினெட்டு நாள் கெடு குறிக்கப்பட்டது. பாரதப் போர் போல வாதப் போர் துவங்கியது. பதினாறு நாட்கள் யஜ்ஞமூர்த்தி தனது மாயாவாத ஜாலங்களை, பிரமிப்பூட்டும் வகையில் வாதித்து

சபையோரை மயங்க வைத்தார். இராமாநுஜர் வாதங்கள் அடக்கமாய் தெளிவாயிருந்தன. யாரும் வெற்றி தோல்வி காணமாட்டால் வாதங்கள் தொடர்ந்தன.

பதினேழாம் நாள் யஜ்ஞமூர்த்தி வெற்றிக் களிப்புடன் "இன்னும் ஒரே நாள்தான் நாம் வாதிக்கலாம்; நாளை வாரும்" என்று சோர்ந்திருந்த இராமாநுஜரிடம் சொல்லி அனுப்பினார்.

மடத்துக்குத் திரும்பிய யதிராஜர் தம் திருவாராதனப் பெருமாள் வரதராஜனை தண்டனிட்டு, "பேரருளாள! ஆழ்வார் தொடங்கி ஆளவந்தார் அளவாக இத்தனை காலம் ஓராண் வழியாய் நிலைத்து வந்த இந்தத் தரிசனம் அடியேனை இட்டுத் தோற்கக் கடவதோ?"

இந்நாள் வரை அருளாளரே தேவரீர் அன்றோ ஸ்வரூபம், ரூபம், குணங்கள், விபூதிகள், அனைத்தும் ஸத்யம் என்று பிரமாணத்தைக் காட்டி, நடத்திக் கொண்டு போந்தீர், இப்போது ஒரு மாயாவாதி என் காலத்தில் எல்லாப் பிரமாணங்களையும் அழித்து விட்டு, லீலை கொண்டாடத் திருவுள்ளமாகில் அப்படியே செய்தருளும்" என்று விண்ணபித்து, தான் அமுது செய்யாமலே கண் அயர்ந்தார் (சாப்பிடாமல் உறங்கினார்)

## அருளாளன் பேரருள்

பேரருளாளன் அன்றிரவு கனவில் தோன்றி "இளையாழ்வீர் நீர் முசிப்பானேன்?, உமக்கு ஸமர்த்தனாயுள்ள ஒரு சிஷ்யனை உண்டாக்கித் தந்தோம் காணும். உம்முடைய பரமாசார்யர் அருளிச் செய்த மாயாவாத கண்டனத்தைச் சொல்லி, அவனை வெற்றி கொள்ளும்" என்று கூறி அருளாளன் மறைந்தார்.

மறுநாள் காலை எம்பெருமான் வாதத்துக்குப் புறப்படும்போதே அவரது திவ்யதேஜஸும் கம்பீர நடையும் கண்டு யஜ்ஞமூர்த்தி தளர்ந்து விட்டார். நேற்று, சேர்ந்து சென்றவர், அதிமானுடப் பொலிவுடன் திரும்பியுள்ளது கண்டு யஜ்ஞமூர்த்தி தன்னையும் மறந்து, எதிர்சென்று அவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார்.

எம்பெருமானார் "இதென்ன? என்று திகைத்து, வாதப் போரைத் தொடலங்காமா?" என்றார்.

யஜ்ஞமூர்த்தி, "தேவரீருக்குப் பெரிய பெருமான் பிரத்யக்ஷமான பின்பு எனக்கேது வெற்றி! என் கல்விச் செருக்கு என்னைக் கெடுத்து விட்டது;

கறிநறுக்கும் கத்தியால் கையை திருத்திக் கொண்ட குழந்தையானேன்; உம்மைச் சரண் அடைகிறேன்; அடியேனை ஆட்கொண்டருளு" என்றார்.

எம்பெருமானார் வியந்து, "அரங்கன் அருள்புரிவான்; ஆளவந்தார் நெறி உமக்கு அடைக்கலம் தரும். நீர் பாக்யசாலி! உமக்கு அருளாளப் பெருமாள் எம்பெருமானார் என்று திருநாமம் சாத்துகிறோம்." என்றார்.

## தேவராஜ முனி

அருளாளப் பெருமாள் (தேவராஜ முனி) ஏற்கனவே துறவிதான். ஏகதண்டி (ஒற்றைக்கோல் பிடித்தவர்). இப்போது முக்கோல் முனிவரானார். காவேரிக்கரை பாகவத சந்நியாசியாகக் காலம் கழிக்க விரும்பினார். அவருக்கு ஒரு மடம் கட்டிக் கொடுத்தார் உடையவர். ஆழ்வார்களின் அருளிச் செயல்களைப் பயிற்றுவித்தார். ஞானமுதிர்ச்சி பெற்ற பின், தேவராஜர் அரிய நூல்களை இயற்றினார்.

ஒருநாள் நான்கு இளைஞர்கள் ஞானப் பசியோடு வைராக்யசாலிகளாய் உடையவரிடம் உபதேசம் பெற வந்தனர். அனந்தாழ்வான், எச்சான், தொண்டனூர் நம்பி, மருதூர் நம்பி என்று முறையே தெரிவித்துக் கொண்ட அவர்களை, அருளாளப் பெருமாள் எம்பெருமானாரிடம் சென்று உபதேசம் கொள்ளுங்கள் என்று பணித்தார் இராமாநுஜர்.

அந்நால்வரையும் கண்ட அருளாளப் பெருமாள் எம்பெருமானார் குருவியின் தலையில் பனங்காய் கட்டினாற்போல் உடையவர் செய்தார்; நீங்கள் "எம்பெருமானார் திருவடிகளே சரணம்" என்று இருங்கோள் என்றார்.

சில அனுபவங்களுக்குப் பின் தேவராஜ முனி தனித்து மடம் கட்டியிருந்ததை, இடித்துத் தள்ளிவிட்டு உடையவர் மடத்திலேயே வந்து அவரை விட்டுப் பிரியாமலிருந்தார்.

## ஆண் பிள்ளை

ஒரு சமயம் ராமாநுஜர் மடத்தில் திருவாய் மொழி காலக்ஷேபத்தில் "சிந்து பூ மகிழும் திருவேங்கடம்" என்ற சொற்றொடரில் ஈடுபட்டு; திருவேங்கடமுடையானுக்கு உகப்பாக திருமலையில் நந்தவனம் அமைத்து, மாலை கட்டி சாத்தும் கைங்கர்யம் செய்ய வல்லார் யாரேனும் இங்கு உளரோ?" என்று கேட்டார்.

காட்டு விலங்குகள், மலைக்குளிர் இவற்றுக்கு அஞ்சி, ஒருவரும் பதில் கூறாது இருந்து விட்டனர். அப்போது "அடியேன் விடை கொள்ளுகிறேன்

என்று எழுந்து நின்றார் அனந்தாழ்வான் என்னும் அப்புதிய சிஷ்யர். "நீரே ஆண்பிள்ளை" என்று எம்பெருமானார் அவரைப் பாராட்டி; திருமலை கைங்கர்யத்துக்கு அனுப்பி வைத்தார்.

அனந்தாழ்வான் காடுமேடுகளைத் திருத்தி "ராமாநுஜன்" என்னும் பெயரில் ஒரு நந்தவனத்தை அமைத்தார். காடுமேடுகளைத் திருத்தியபோது, கர்ப்பிணி மனைவியைக் கடுமையாக வேலை வாங்கினார். அந்த கர்ப்பிணிப் பெண்ணுக்கு, கணவன் அறியாமல் ஒருவர் உதவி வந்தார், மனைவி சளைக்காமல் வேலை செய்வது கண்டு சந்தேகித்து, அனந்தாழ்வான் உண்மை என்னவென்று கேட்டார். பெரியவர் ஒருவர் உதவி பற்றிக் கூறினாள் இளம் மனைவி, நமது ஆசார்ய கைங்கர்யத்தைத் திருடும் அந்தப் பெரியவர் யார் என்று பார்க்க வந்த போது, அவர் தூரத்தில் ஓடினார். அவரைத் துரத்திச் சென்று கிட்டமாட்டாமல் திரும்பி நின்ற அவர் மீது ஆத்திரத்தில் களைக்கேட்டை வீசினார். அவர் ஓடி மறைந்தார். மாலை திருவேங்கமுடடையானை அனந்தாழ்வான் சேவிக்கச் சென்ற போது, முகத்தில் தான் வீசிய களைக் கோட்டு காயத்துடன் இன்றும் சேவை சாதிக்கிறான் என்று கூறுவது உண்டு.

## உடையவர் திருவேங்கட யாத்திரை

திருமலையில் அனந்தாழ்வான் கைங்கர்யத்தைக் கேள்வியுற்று திருமலை நம்பியிடம் திருந்தி வந்துள்ள கோவிந்த பட்டரையும் காண விழைந்து திருவேங்கட யாத்திரை புறப்பட்டார் எம்பெருமானார்.

வழியில் திருக்கோவலூர் நாயனையும் பெருமாள் கோயிலில் திருக்கச்சி நம்பியை முன்னிட்டு அருளாளனையும் மங்களாசாசனம் செய்தார். மற்றும் வழியில் திவ்ய தேசத்து எம்பெருமான்களைச் சேவித்து, திருவேங்கடம் நண்ணினார்.

இடையில் வழி தவறித் திகைத்து நின்றபோது, ஏற்றம் இறைப்பான் ஒருவன் வேங்கடத்துக்குச் சரியான வழி காட்டவே, இராமாநுஜர் அவனை தண்டனிட்டு வணங்கினாராம். இதுவே ஆஸ்திக நெறி என்னும் வருணித்தாராம்.

## இளமண்டியம்

எம்பெருமானார் திருமலை தாழ்வரையில், திருப்பதியில் ஆழ்வார்களைத் திருவடி தொழுது, விட்டல தேவன் என்னும் அவ்வூர்த் தலைவனை சிஷ்யனாக்கிக் கொண்டார். அவனால் இளமண்டியம் என்ற கிராமம்

அவருக்குக் கிடைத்தது. அந்த ஊரில் தமது சிஷ்யர் பலரைக் குடியமர்த்தி ஸ்ரீ வைஷ்ணவ கிராமம் அமைத்தார்.

கீழே எம்பெருமானார் எழுந்தருளியிருக்கிறார் எனக் கேட்டு, திருமலையினின்று அனந்தாழ்வான் எதிர்கொண்டு ஓடி வந்தார். "ஆழ்வார்கள் திருமலையை மிதியாமையாலே நாமும் ஏறக்கடவோமல்லவா" என்றார் யதிராஜர்.

"ஸ்வாமி, மலை ஏறாவிடில் அடியோங்களும் ஏற மாட்டோம்; மற்ற யாரையும் ஏறவிட மாட்டோம்" என்றார் அனந்தாழ்வான்.

வேறு வழியின்றி திருமலையைக் காலையிட்டு மிதியாமல், தவழ்ந்தவாறே பயபக்தியுடன் சென்றார். காடும் வானரமும் வேடும் உடைய வேங்கடத்தைப் பூரணமாக அனுபவித்துக் கொண்டே சிஷ்யர்களோடு மலையேறினார் எம்பெருமானார்.

## திருமலை நம்பியின் பண்பு

எம்பெருமானார் வருவது கேட்டு திருமலை கைங்கர்யத்தில் ஈடுபட்டிருந்த திருமலை நம்பி, கோயில் மரியாதைகளையெல்லாம் தருவித்து, தீர்த்தப் பிரஸாதங்களுடன் எதிர்கொண்டு அழைத்தார்.

உடையவர் திருமலை நம்பியைத் தண்டனிட்டு "அடியேனுக்காக தேவரீர் எழுந்தருள வேணுமோ ஒரு சிறியவர் இல்லையோ" என்று கேட்டார்.

"நாலு வீதிகளிலும் தேடித் திரிந்தேன், என்னைக் காட்டிலும் சிறியவர் ஒருவரும் கிடைக்கவில்லை. எனவே நானே வந்தேன்" என்றார் திருமலை நம்பி.

அரிய பண்பின் இனிய குரல் கேட்டு அயர்ந்து நின்றார் இராமாநுஜர். பிறகு கோனேரியில் நீராடி, அனந்தாழ்வான் அமைத்த நந்தவனத்தை - ராமாநுஜனைப் பார்க்கச் சென்றார் இராமாநுஜர். நந்தவனம் கண்டு அனந்தாழ்வானை, "வளர்த்ததனால் பயன் பெற்றேன்" எனக் கொண்டாடினார்.

பின்னர் ஞானப்பிரானை (வராஹப் பெருமாள்) ஆனந்த நிலையத் திருமலையப்பனை, திருவேங்கடவனை, சேவிக்க குலசேகரன் படி கடந்து சென்று

"அகலகில்லேன் இறையும் என்று
அலர்மேல் மங்கை உறைமார்பா!
நிகரில் புகழாய், உலகம் மூன்று
உடையாய் என்னை ஆள்வானே!
நிகரில் அமரர் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங்கடத்தானே!
புகல் ஒன்று இல்லா அடியேன் உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே"

என்று ஆழ்வார் பாசுரங் கொண்டு திருவடி தொழுதார்.

எம்பெருமானார் தன் பூர்வாசிரமத்து அம்மான் திருமலை நம்பியிடம் ஸ்ரீ ராமாயணம் கேட்க, திருப்பதியில் ஓராண்டு காலம் தங்கினார். ஆளவந்தாரின் அபூர்வ கருத்துக்களை அம்மான் வாயிலாகக் கேட்டார். திருமலை நம்பி திருத்திப்பணி கொண்ட கோவிந்த பட்டரைக் கருத்தில் கொண்டே அவர் இங்கு தங்கியது என்னலாம். கோவிந்தருடன் கூடிக் குலாவியிருந்தார்.

## தம்பியின் ஜீவகாருண்யம்

ஆசார்யன் திருமலை நம்பிக்கு கோவிந்த பட்டர் பணி விடைகளைச் செவ்வனே புரிந்து வந்தார். நெடு நாளாகக் காண ஆவலாய்யிருந்த எம்பெருமானரைக் கண்டு அவருடன் கூடிய போது பேரின்பமடைந்தார்.

ஒருநாள் திருமலை நம்பியின் தோட்டத்தில் கோவிந்த பட்டர் ஒரு நாகப்பாம்பின் வாயில் கையிட்டு, ஏதோ செய்ததையும் பின்னர் திருமலை நம்பிக்கு வழக்கம் போல் குற்றேவல் செய்ததையும் கண்டார். "கோவிந்தப் பெருமானே! என் செய்தீர்; விஷப்பாம்பின் வாயில் ஏன் கைவிட்டீர்?" என்று கேட்டார்.

பாம்பு நாக்கை நீட்டிக் கொண்டே நோவு பட்டதைக் கண்டேன்; அதன் நாக்கிலே முள் தைத்திருந்தது. அதனை பிடுங்கி எறிந்தேன் அவ்வளவு தான் என்றார் கோவிந்தர். விஷ ஜந்துக்களிடத்தும் என்ன இரக்கம்! எத்தகைய கருணை! என்று கொண்டாடினார் உடையவர்.

உடையவர் ஸ்ரீ ராமாயண காலக்ஷேபத்தை திருமலை நம்பியிடம் பூர்த்தி செய்தார். திருவரங்கம் செல்ல விடை கொள்ள தண்டனிட்டு நின்றார்.

"இத்தனை தூரம் எழுந்தருளின உமக்கு நாம் ஒன்றும் செய்யப் பெற்றிலோமே!" என்று நம்பிகள் கூற, "அடியேனுக்கு ஏதேனும் தர

வேண்டும் என்று திருவுள்ளமாகில், கோவிந்தப் பெருமாளைக் கொடுத்தருளும்'' என்றார் உடையவர்.

உடனே மாமா திருமலை நம்பி மருமகனான கோவிந்தரை அழைத்து "இனி எம்பெருமானார் தாம் உமக்கு எல்லாம்; நம்மைக் கண்டாற்போல் இனி உடையவரை சேவித்திரும்'' என்று கூறி நீர் வார்த்துக் கொடுத்தார்.

## விற்ற பசுவுக்குப் புல் இடுவதா?

உடையவர் கோவிந்தப் பெருமாளையும் கூட்டிக் கொண்டு வட வேங்கடத்திலிருந்து தென்னரங்கம் திரும்பினார். வழியில் "வண்டு கிளரும் நீள்சோலை வண்பூங்கடிகையில் (சோளங்கிபுரம்) மலையேறி மிக்கார். வேதவி மலர் விழுங்கும் அக்காரக் கனியைக் கண்டு சேவித்து அங்கிருந்து திருப்புட் குழியில் தன் இளமை குருகுல நினைவுடன் விஜயராகவனைச் சேவித்து" காஞ்சிக்கு மீண்டார்.

காஞ்சியில் தங்கியபோது, கோவிந்தப் பெருமாள் உடம்பு இளைத்து போனது கண்டு உடையவர் "நீர் உடனே ஆசார்யனிடம் திரும்பிச் சென்று, சேவித்து வாரும்" என நியமித்து, சில சிஷ்யருடன் திருப்பதிக்குத் திருப்பி அனுப்பி வைத்தார்.

திருப்பதியில் திருமலை நம்பி திருமாளிகை வாசலில் வந்து தண்டனிட்டு நின்ற கோவிந்தரைக் கண்டதும் அங்குள்ளார் உள்ளே சென்று நம்பியிடம் தெரிவித்தனர். நம்பி சீற்றத்துடன் ''பித்தனைப் போகச் சொல்லுங்கள்'' என்றார்.

அருகிலிருந்த நம்பியின் தேவிகள், ''இளைத்து ஏங்கி வந்துள்ள மருமகனைப் பசியோடு எப்படி அனுப்புவது? களைப்பும், பசியும் தீர அமுது செய்து ஆறிச் செல்லட்டுமே'' என்றாள் ''விற்ற பசுவுக்குப் புல்லிடுவார் உண்டோ? போகச் சொல்லுங்கள்'' என்று கண்டிப்பாகச் சொல்லி முகம் கொடாமலிருந்து விட்டார்.

கோவிந்தப் பெருமாள் மீண்டும் ஸ்ரீ வைஷ்ணவர்களுடன் பெருமாள் கோவிலுக்கு வந்து உடையவரை சேவித்து நின்றார். உடையவர் திருமலை நம்பியின் நிஷ்டையை சிலாகித்து, கோவிந்தப் பெருமாளுக்கு ஆறுதல் கூறி, அவருடன் திருக்கச்சி நம்பியைத் தண்டனிட்டு விடைபெற்று ஸ்ரீரங்கம் புறப்பட்டார்.

உடையவரின் ஓராண்டு காலப் பிரிவைத் தாளாத ஸ்ரீரங்கவாசிகள் வாடிய பயிர் போல் ஆயினர்; அவர் வரவுகண்டு மழை நீரால் தழைத்தது போல் விளங்கினார்.

## கோவிந்தரின் குணங்கள்

எம்பெருமானாருடைய கோஷ்டியில், புதிதாக வந்து சேர்ந்த கோவிந்தப் பெருமாளின் ஞான பக்தி வைராக்கியங்கள், நாளுக்கு நாள் பெருக வளர்ந்தது. கண்டார் அனைவரையும் அவரைக் கொண்டாடினார். கோவிந்தன் முன்னிலையிலேயே பல படியாகக் கூறி, பாராட்டும் போதெல்லாம், அவரும் "ஒக்கும் ஒக்கும்" என்று அவர்களையும் காட்டில் தம்மைத் தாமே சிலாகித்துக் கொண்டார்

இதைக் கண்ட உடையவர் "எல்லோரும் உம்மைக் கொண்டாடினால் நீர் நைச்சியமாக வார்த்தை சொல்ல வேண்டியிருக்க, உம்மையே நீர் போற்றிக் கொள்ளுகிறீரே" இது ஸ்வரூபத்துக்குச் சேருமோ? என்று கோவிந்தரைக் கேட்டார்.

"ஐயோ! அவர்கள் என்னைக் கொண்டாடுவதென்றால் காளஹஸ்தியில் கையும் குடமும், கழுத்தில் இலந்தைக் கொட்டை வடமும் கொண்டு எளிவரவு பட்டு நின்ற நிலையைக் கொண்டாடுவதாக அன்றோ தேறி நிற்கும். இந்தப் புகழுரைகள் எல்லாம் அடியேனைத் திருத்திப் பணி கொள்ள தேவரீர் பண்ணின க்ருஷி பலனைக் கொண்டாடுவது அல்லவா? அடியேனும் சேர்ந்து கொண்டாடுவது அன்றோ முறை அதையே செய்தேன்'' என்றார்.

"நல்லீர் நல்லீர்" என்று உகந்து உம்முடைய குணங்கள் நமக்கும் உண்டாம்படி அழகிய நெஞ்சாலே அணைத்துக் கொள்ளீர் என்று வாரி எடுத்து தழுவிக் கொண்டருளினார் உடையவர்.

ஒருநாள் ஸ்ரீரங்கம் வீதியில் ஒரு அடியாள் (தாசி) வீட்டு வாசலில் எம்பார், தன் பணிகளை மறந்து தயங்கி நிற்பதைக் கண்ட ஒரு ஸ்ரீ வைஷ்ணவர், உடையவர் கோஷ்டியில் அதை வெளியிட்டார். கோவிந்தர் அதை மறுக்காமல் "ஆம் எம்பெருமானார் தாலாட்டு செவிக்கினிய செஞ்சொல்லாயிருக்க தேவரீர் குணானுபவம் முன்னடி வளையக் கட்ட, போக்கடியற்று நின்றேன்'' என்றார்.

புகார் கொடுத்த ஸ்ரீ வைஷ்ணவரும் அவ்வீட்டில் தாலாட்டு நடந்தது உண்மையே என்று ஒப்புக் கொண்டார்.

கோவிந்தரின் யதிராஜ பக்தியை அனைவரும் கொண்டாடினர். இராமாநுஜ குணங்களும், திருமேனி அழகில் அனுபவமே ஸகலமும் என்ற நிலை நாளுக்கு நாள் முதிர்ந்தது.

எதிராசன் வடிவழகில் ஈடுபட்டு

**பற்பமெனத்திகழ் பைங்கழல் உந்தன் பல்லவமே விரலும்**
**பாவனமாகிய பைந்துவராடை பதித்த மருங்கழகும்**
**முப்புரி நூலொடு முன்கையில் ஏந்திய முக்கோல் தன்னழகும்**
**முன்னவர் தந்திடு மொழிகள் நிறைந்திடு கமலக் கண்ணழகும்**
**காரிசுதன் கழல் சூடிய முடியும் கன நற்சிகை முடியும்**
**எப்பொழுதும் எதிராசன் வடிவழகு என் இதயத்துளதால்**
**இல்லை எனக்கெதிர், இல்லை எனக்கெதிர்**
**இல்லை எனக்கு எதிரே!!!**

என்று எக்களிப்போடு இருந்தார், பின்னர் எம்பாராக மாறிய கோவிந்தர்.

இப்படியிருந்த நாளில் கோவிந்தரின் தாயார் அவரிடம் வந்து, உமது தேவிகள் பக்குவமானாள் என்ன, ''ஆனால் என்ன, இருட்டும் தனிமையும் கிட்டும் போது வரவிடும்'' என்றார்.

எப்பொழுதும் எம்பெருமான் அவர் உள்ளத்தில் குடி கொண்டதால், அவர் இருளைக் காணவே இல்லை. ராமாநுஜனடியார் குழாத்தில் அவருக்குத் தனிமையும் கிட்டவில்லை.

இதுபற்றி ஜீயரிடம் கோவிந்தரின் தாயார் விண்ணப்பிக்க "உலக நடையில் ஒரு ருது காலத்தில், பத்னியோடு இருந்து வாரும்" என்று உடையவர் நியமிக்க அப்படியே தனிமையில் மனைவியுடன் இருந்தபோது "அந்தர்யாமி பிரகாசித்திருக்க அழிச்சாட்யம் கூடுமோ" என்று பிரிந்து வந்து விட்டார்.

## "எம்பார் எனும் பெயர்"

கோவிந்தனின் வைராக்ய பூர்த்தியைக் கண்ட உடையார் அவருக்கு ஆச்ரமம் (துறவு) நல்கி "எம்பார்" எனப் பெயரும் இட்டு, தமக்கு அடுத்தபடி தர்சன நிர்வாகத்துக்கு இளவரசாக்கினார். "எம்பெருமானார்" என்பதன் சுருக்கமே "எம்பார்" ஆனது.

ஸ்ரீரங்கம் இப்போது புதிய பொலிவுடன் விளங்கியது. எம் பெருமானாகிற ஒரு யுக புருஷர், கூரத்து ஆழ்வான், முதலியாண்டான், அருளாளப் பெருமாள் எம்பெருமானார், எம்பார் போன்ற பல மஹான்களை சிஷ்யராகக் கொண்டு, திக்குற்ற கீர்த்தியுடன் விளங்கினார்.

நாட்டின் பல பகுதிகளிலிருந்து பலபடியான மக்கள், பண்டிதர், பாமரர் எல்லாரும் எம்பெருமானார் வைபவத்தில் ஈடுபட்டு வைஷ்ணவராகி, உய்யும் வண்ணம் திரள் திரளாக நாள்தோறும் ஸ்ரீரங்கம் நோக்கி வந்தனர்.

## ஸ்ரீ பாஷ்யகாரர்

ஆளவந்தார் குறைகள் மட்டும் நிறைவேறாமல் இருந்ததை எம்பெருமானாருக்கு நினைவுபடுத்தினர் பெரிய நம்பி போல்வார். வியாஸரின் பிரம்ம சூத்ரத்துக்கு ஆளவந்தார் விரும்பியபடி விசிஷ்டாத்வைத பாஷ்யம் இயற்றும் பணியில் முனைந்தார் உடையவர். "போதாயனர் என்பவரின் விருத்தியுரை வியாஸரின் திருவுள்ளத்தை அனுசரித்திருந்தது என்றும், டங்கர், திரடமிடர், குஹதேவர் போன்றோரும் பிரம்ம சூத்ர உரையைக் கூறி உள்ளனர்'' என்றும் தகவல்களைச் சேகரித்தார். போதாயன விருத்தி நூல் காஷ்மீரத்தில் சாரதா பீடத்தில் மட்டுமே உள்ளது என்றும் அறிந்தார் இராமாநுஜர்.

ஆழ்வானை உடனே துணை கொண்டு, சில சிஷ்யர்களுடன் வடநாட்டுக்குப் பயணமானார். வழியில் பல பண்டிதர்கள் அவர் வட தேசப் பயணத்தின் நோக்கத்தை விசாரித்து அறிந்தனர். போதாயன விருத்தி அவரிடம் கிடைத்தால், தங்களது அத்வைத வாதங்கள், அடிபட்டுப் போகும் என்று அஞ்சி, அந்நூலை மறைக்க முயன்றனர்.

இராமாநுஜர் விடாது முயன்று, காஷ்மீர் தலைநகரான ஸ்ரீநகர் சென்று அரசனிடம் பேசினார். இராமாநுஜரின் அறிவுக் கூர்மை, வாக்கு வன்மை, கம்பீரத் தோற்றம், வடிவழகு, இவைகளைக் கண்ட அரசன் சாரதா பீடத்திலிருந்து போதாயன விருத்தி நூலை அவரிடம் கொடுத்து சன்மானித்து அனுப்பி வைத்தான்.

அதை அறிந்த மாயாவாத பண்டிதர்கள் தங்கள் வாழ்வற்றது என எண்ணி சில நாட்கள் அவரைத் தொடர்ந்து அவர் அறியாமல் பின் சென்று, அந்நூலைக் களவாடிச் சென்றுவிட்டனர். ஐயோ! கிடைத்தற்கரிய பொருளை கை நழுவ விட்டேனே! ஐந்தாறு தினங்கள் தானே அவ்வர்த்தைகளைக் கண்டேன்; குறைக்கு என் செய்வேன் என்று ஏங்கி வருந்தினார் இராமாநுசர்.

## ஆழ்வாரின் அற்புத ஆற்றல்

உசாத்துணையாய் உடனிருந்த ஆழ்வான் உடையவரை நோக்கி "கவலை வேண்டாம், ஸ்வாமி தேவரீர் களைத்துத் தூங்கும் போதெல்லாம் அந்நூலை எடுத்து அடியேன் முழுவதும் பார்த்து விட்டேன். அதில்

உள்ளதனைத்தும் இப்போதே வேண்டுமானாலும் சொல்லக் கடவேன்'' என்றார்.

ஆழ்வானின் அற்புத ஆற்றலை நினைத்து மகிழ்ந்து பாராட்டினார் இராமாநுஜர். ஸ்ரீரங்கம் திரும்பியதும் ஸ்ரீ பாஷ்யம் எழுதும் பணி தொடங்கியது."ஆழ்வானே! நான் சொல்லுகிறேன்; நீர் எழுதிக் கொண்டே வாரும். உமது திருவுள்ளத்துக்கு ஒத்திருந்தால் ஒழிய நீர் எழுத வேண்டாம்" என்று கூறி, உரை சொல்லிச் சென்றார். ஆழ்வான் பட்டோலை ஏடுபடுத்திக் கொண்டு வந்தார். ஓரிடம் வந்தபோது, உடையவர் சொல்லியும் ஆழ்வான் எழுதாமல் நின்று விட்டார். இதைக் கவனித்த இராமாநுஜர் சிறிது ஆத்திரப்பட்டு "ஆழ்வானே! நான் சொல்வதை எழுத உமக்கு மனம் இல்லை என்றால் நீரே பாஷ்யம் பண்ணும்" என்று சொல்லி எழுந்து அப்பால் போய்விட்டார்.

இது அங்கிருந்த சிஷ்யர் பலருக்கும் வியப்பளித்தது. முதலில் எம்பெருமானார் சொன்னபடிதானே, ஆழ்வான் எழுதாமல் நின்றார். இதற்குக் காரணம் புரியாமல் காத்திருந்தனர். ஆழ்வான் அமைதியாக இருந்தார். சிறிது நேரம் கழித்து வந்த உடையவர் தம் வாக்கியத்தை திருத்திக் கூறி, இப்போது எழுதும் என்றார். ஆழ்வானும் தடையின்றி எழுதிச் சென்றார்.

ஜீவாத்ம சொரூபத்தைப் பற்றி அருளிச் செய்கையில் "பகவத் சேஷ பூத:" (ஜீவன் பகவானது அடியன்) என்ற தாஸ்ய சொரூபமே ஜீவாத்மாவுக்குள்ள முக்கிய லக்ஷணம். அந்த அம்சம் குறைவுபட ஜீவனின் ஞாத்ருத்வம் (அறிவுடமை) மட்டும் சொன்னதால் ஆழ்வான் தயங்கி நின்றார் என்பது பின்னர் தெரிய வந்தது.

ஆசாரியர் ஆத்திரப்பட்டு உம்மைக் கோபித்தாரே, அப்போது நீர் என்ன எண்ணியிருந்தீர் என்று ஆழ்வானைக் கேட்டனர் சிலர். (இடையில் திருக்கோட்டியூர் நம்பியிடம் சென்று வந்த நிகழ்ச்சி விரிவஞ்சி விடப்பெற்றது)

"உடமை, உடையவன் இட்ட வழக்காயிருக்கும்; அடியேனுக்கு இதில் அந்வயமில்லை" என்று தன் பாரதந்திரியத்தை (பிறர் இட்ட வழக்காயிருக்கும் தன்மையை) வெளியிட்டார் ஆழ்வான்.

எம்பெருமானார் அவதாரத்தின் முக்கிய பிரயோஜனமான பிரம்ம சூத்திர பாஷ்யம் இனிது நிறைவேறி முற்றுப் பெற்றது.

## விஜய யாத்திரை

இதனை நாடெங்கும் பரவச் செய்ய விஜய யாத்திரையை மேற்கொள்ள வேண்டும் என்று சிஷ்யர்கள் வேண்டினர். அரங்கன் முன்பு சென்று அனுமதி கேட்டார் எம்பெருமானார்.

அரங்கன் அமைதியுடன் "விஜய யாத்திரை" யைத் தொடங்கினார். முதலில் சோழ மண்டலம் எழுந்தருளினார். திருக்குடந்தை ஆராவமுதனை ஆழ்வார் பாசுரத்தால் அனுபவித்தார். மற்றுமுள்ள திவ்ய தேசத்து எம்பெருமான்களை மங்களாசாசனம் செய்தார். இடையில் ஆங்காங்கே சிஷ்யச் செல்வத்தைச் சேர்த்துக் கொண்டனர். புறச் சமய (பாஹ்ய), குதிருஷ்டி (குறுகிய அகச் சமயவாதி)களை, திருத்திப் பணி கொண்டார்.

வளரிளம் பொழில் சூழ் மாலிருஞ்சோலை, கள்ளழகர் சந்நிதியில் சென்று சேவித்தார். உடனிருந்த சிஷ்யர் பலருள் கிடம்பி ஆச்சானை அழைத்து, அழகர் முன்னிலையில் ஏதேனும் சொல்லிக் காணீர் என்று பணித்தார். ஆச்சானும் எம்பெருமானார் திருவுளம் உகக்கும் என்று எண்ணி, ஆளவந்தாரின் ஸ்தோத்திரத்திலிருந்து

**அபராத ஸஸ்ரபாஜனம் பதிதம் பீம பவார்ணவோதரே**
**அகதிம் சரணாகதிம் ஹரே! க்ருபயா கேவலம் ஆத்மஸாத் குரு**

என்று விண்ணப்பித்தார்

(குற்றங்களை ஆயிரக்கணக்கில் செய்து பாவக் கடலுள் அழுந்திக் கிடக்கும் அகதி நான். ஹரியே! உம்மைத் தவிர புகல் இல்லை; உமது நிர்ஹேதுகமான கருணையாலே காத்தருளும்)

இதைக் கேட்டதும் கள்ளழகர், அர்ச்சக முகமாக, ஆட்சேபம் எழுப்பி, "என்னங்காணும், எம்பெருமானாரைப் பக்கத்தில் பெற்று வைத்து அகதி, அகிஞ்சனன், பாவி, என்றெல்லாம் சொல்லிக் கொள்ளுகிறீர், பொருத்தமன்று நிறுத்தும்" என்று தடுத்திட்டாராம்.

## திருக்குருகைப் பிள்ளான்

பிறகு திருப்புல்லாணியில் சேது தர்சனம் பண்ணி, நம்மாழ்வாரின் அவதார ஸ்தலமான திருநகரிக்குச் சென்றார். தம்முடன் வந்த திருமலை நம்பியின் குமாரரான பிள்ளான் என்பவருக்கு நம்மாழ்வார் பெயரைச் சூட்டி, "திருக்குருகைப் பிரான் பிள்ளான்" என்று அழைத்து ஆழ்வாரின் விசேஷ கடாக்ஷத்துக்கு இலக்காக்கினார்.

ஆளவந்தார் குறைகளில், நம்மாழ்வார் திருவாய்மொழிக்கு உரை காண வேண்டுவது ஒன்றல்லவா? அதற்காக ஆழ்வானைக் கொண்டு ஸ்ரீ பாஷ்யம் தலைக் கட்டினது போல் பிள்ளானைக் கொண்டு திருவாய் மொழி உரை இயற்ற நியமனம் செய்தார். நம் தர்சனத்துக்குப் பிரதம ஆசார்யரான சடகோபர் பெருமையெல்லாம் விளங்க ஸ்தோத்திரம் செய்து திருவடி தொழுதார்.

## சடகோபன் பொன்னடி

தென்னரங்கன் பொன்னடியாகத் திகழும் சடகோபனிடம் எம்பெருமானார் அடிபணிந்து ஆழ்வாரின் பொன்னடியாகத் தம்மை உலகம் வழங்க வேண்டும் என்று பிரார்த்தித்தார். அதுவரை நம்மாழ்வாரின் திருவடி நிலைகள் "மதுரகவி" என்று வழங்கி வந்தது. அன்று முதல் "ராமாநுசன்" என்றே அழைக்கப் பெறலாயிற்று.

## ஈரங்கொல்லியின் நற்பேறு

ஆழ்வார் திருநகரியில் சங்கணி துறையில் உடையவர் நீராடிய போது, எம்பெருமானாரை, ஈரங்கொல்லி என்னும் ஒரு சலவையாளன் (வண்ணான்) திருவடியில் தலை சாய்த்து தண்டனிட்டான். அத்துடன் அருகிலிருந்த தன் நான்கு குமாரர்களைப் பெயரிட்டழைத்து - எம் பெருமானாரை சேவிக்கும்படி பணித்தான். மூத்தவனை 'சடகோபா வா' என்றான். அடுத்தவனை "காரிமாறா!" என்று கூப்பிட்டான். மூன்றாமவனை "வகுளாரபரணா" என்று அழைத்தான். கடைக்குட்டிச் சிறுவனை "குருகூர் நம்பி" வந்து கும்பிடு என்றான். ஊரும் நாடும் உலகமும் தன்னைப் போல அவன் பேரும் தார்களுமே பிதற்றச் செய்தவர் ஆழ்வார்; ஆழ்வாரின் திருநாமங்களை சாமானியரும் ஆதரித்து அழைப்பது கேட்டு எம்பெருமானார் ஆனந்தம் கொண்டார். பிள்ளைகளுக்குப் பெயரிட்டு அழைக்கும் பேறு தமக்கு இல்லையே என்று தமது ஏக்கத்தை வெளியிட்டார் எம்பெருமானார்.

## திருக்கோளூர்ப் பெண்பிள்ளை

பிறகு, மதுரகவி ஆழ்வார் அவதாரம் பண்ணின திருக்கோளூர் சென்று, வைத்தமாநிதியைத் திருவடி தொழுது புறப்படுகையில் எதிரே வந்த ஒரு பெண்பிள்ளையிடம் பேச்சுக் கொடுத்தார். ஞானியான அப்பெண் எண்பத்தோரு வாக்கியங்களைச் சொன்னாள். "திருக்கோளூர் பெண்பிள்ளை ரகசியம்" என்று தனி நூலாக வழங்குகிறது அவ்வாக்கியங்கள்.

பிறகு மற்றுமுள்ள நவதிருப்பதி எம்பெருமான்களையும் மங்காசாசனம் செய்து எதிர்த்து வந்த மதவாதிகளை வாய்மாளச் செய்து, திருக்குறுங்குடி சேர்ந்தார்.

## ஸ்ரீ வைஷ்வண நம்பி

திருக்குறுங்குடி சேருமுன் உடையவர் மலைநாட்டு திருப்பதிகளின் தலைமைத் தலமாய்த் திகழும் அனந்த புரநகர் சென்று அங்கு பத்மநாபன் கோயிலை ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயப்படி திருத்தியமைப்பது எங்ஙனம் என்று எண்ணமிட்டவாறு அன்றிரவு அங்கு உறங்கினார். அங்கு ஓர் அதிசயம் நிகழ்ந்தது! திருவனந்தபுரத்தில் இரவு உறங்கியவர் காலையில் கண் விழித்துப் பார்த்தபோது திருக்குறுங்குடி அருகில் திருவட்டப் பாறையில் தாம் கிடப்பதை உணர்ந்தார். நாம் ஒன்று நினைக்க அவன் ஒன்று நினைத்தான் என்று ஆறுதல் பெற்று, காலைக்கடன் முடித்து, அருகில் ஓடிய அருவியில் நீராடி வட்டப் பாறையில் அமர்ந்து திருமண்காப்பு அளித்தார்.

அப்போது புதியவர் ஒருவர் அங்கு வந்து உடையவரை தண்டனிட்டு, “அடியேனுக்கும் திருமண் இட வேண்டும்” என்று பிரார்த்தித்தார். எம்பெருமானாரும் அவ்வாறே அவருக்குத் திருமண் இட்டு விட்டார். பிறகு குறுங்குடி நம்பியைச் சேவிக்க கோயிலுக்குச் சென்று தண்டனிட்டு நின்றபோது, அன்று காலை தம் கையால் இட்ட அதே திருமண் காப்புடன் நம்பி சேவை சாதித்தார். அத்துடன் நில்லாமல் அருள்பாடிட்டுத் தனி ஆசனமிட்டு, அதில் எம்பெருமானாரை ஆசார்ய ஸ்தானத்தில் எழுந்தருள்வித்து, தான் சிஷ்யனாகித் தரையில் நின்று, பஞ்ச சம்ஸ்காராதிகளைப் பெற்று, ஸ்ரீ வைஷ்ணவ நம்பி என்னும் புதிய தாஸ்ய நாமத்தையும் உடையவரிடமிருந்து பெற்றான் குறுங்குடி நம்பி.

இந்த அதிசய அருள் நிகழ்ச்சிக்குப்பின் உடையவர் திருவண்பரிசாரம், திருவட்டாறு, திருவனந்தபுரம், சேவித்து, அங்கு ராமாநுஜ மடத்தை நிறுவி, மற்றுமுள்ள மலைநாட்டுத் திருப்பதிகளையும் தண்டனிட்டு, அங்கு புறச்சமயிகளை வென்று பூப்பிரதக்ஷணமாக வடநாட்டுக்கப் பயணமானார்.

## வடதேச விஜய யாத்திரை

வடமதுரை சென்று சாளக்கிராமம் போனபோது ஜைன பௌத்தர் பலர் எதிர்த்து வர உடனிருந்த முதலியாண்டானை அவ்வூரின் குடிநீர் பெருகும் இடத்தில் சென்று கால் அலம்பி வாரும் என்று நியமித்தார். முதலில் ஆண்டானின் ஸ்ரீ பாத தீர்த்தத்தால் அவர்கள் ஸாத்விகம் தலையெடுத்து,

உடையவரிடம் எதிர்த்து நில்லாது அடி பணிந்து சிஷ்யர்களாகத் திருந்தினர். இது கர்நாடகத்தில் நிகழ்ந்ததாகவும் கூறுவர்.

பின்பு துவாரகைக்குச் சென்று துவாரகாநாதனை வாழ்த்தி பத்ரிகாச்ரமம் சேர்ந்தார். திருமங்கையாழ்வார் பாசுரங்களால் வாழ்த்தி,

> "ஸர்வதேச தசாகாலேஷு அவ்யாஹத பராக்ரம
> ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்தாம் அபிவர்த்ததாம்!"

என்று தமக்குப் பல்லாண்டு பாடி வாழ்த்தி வரும்படி ஹிமயச் சிகரத்தில் சாசனமிட்டுத் திரும்பினார்.

பிறகு நைமிசாரண்யம், கோகுலம், கோவர்த்தனம், பிருந்தாவனம், திருக்கண்டம் முதலான திவ்ய தேசங்களையும் சேவித்து, அறுசமயச்செடியின் அடியறுத்து, ஸ்ரீ வைஷ்ணவத்தை நிலைநாட்டி, காஷ்மீரம் சேர்ந்தார். ஸ்ரீநகரில் சாரதா பீடம் என்று பட்டி மண்டபத்தைக் கிட்டினார்.

## ஸ்ரீ பாஷ்யகாரர்

அங்கு அப்போது ஸரஸ்வதி தேவி தானே வாசலைத் திறந்து கொண்டு எதிரே புறப்பட்டு வந்து, உடையவரை பார்த்து, ஒரு சுருதி வாக்கியத்துக்குப் பொருள் கேட்டாள். அற்புதமான உரை நல்கினார் உடையவர்.

சரஸ்வதி தேவி மகிழ்ந்து உடையவரின் ஸ்ரீ பாஷ்யச் சுவடியை தன் தலைமேல் வைத்து, அவருக்கு ஸ்ரீ பாஷ்யகாரர் என்று திருநாமம் சாற்றி, ஹயக்ரீவரையும் ஆராதிக்கக் கொடுத்து சன்மானித்தாள். காஷ்மீர் அரசனும், பண்டிதர்களும் இராமாநுஜரின் அடிபணிந்து ஸ்ரீ வைஷ்ணவராயினர்.

## ஸ்ரீ பாஷ்யச் சிறப்பு

வியாஸரின் பிரம்மசூத்திரத்துக்கு சங்கர பாஷ்யம், மத்வ பாஷ்யம், நீலகண்ட பாஷ்யம் போன்ற பல உரை நூல்கள் உள்ளன. சூத்ரமியற்றிய வியாஸரின் கருத்தை, போதாயன ரிஷியின் வழியில் சிந்தித்துப் பொருந்திய பொருளை உள்ளது உள்ளபடி காட்டுவதால் இதற்கு ஸ்ரீ பாஷ்யம் என்றே சரஸ்வதி பெயரிட்டழைத்தாள்.

விசிஷ்டாத்வைதமே வியாஸரின் கருத்து என்பதையும் பேத, அபேத ச்ருதிகள், கடக ச்ருதிகள், ஸகுணவாக்யங்கள், நிர்குண வாக்கியங்கள் எல்லாவற்றுக்கும் இடையில் முட்டின்றி முரண் இன்றி, பொருத்தமுறப்

பொருள் கூறி, இணைத்துக் காட்டும், அற்புத ஆற்றல் விசிஷ்டாத்வைத வாதத்திற்கேயுள்ள தனிச் சிறப்பாகும்.

குறிப்பாக சரீர ஆத்மபாவம், ஸத்காரிய வாதம், ஸாமானாதிகரண்ய நியாயம், அப்ருதக் ஸித்தி விசேஷணம் போன்ற அரிய நுட்பக் கருத்துக்களால் எதிரிகள்வாய் மடங்கச் செய்யும் ஸ்ரீ ராமாநுஜரின் அரிய மேதையை ஸ்ரீ பாஷ்யத்தில், ச்ருதப் பிரகாசிகை, உரையின் உதவியுடன் நன்கு அனுபவிக்கலாம்.

ஸ்ரீ பாஷ்யக்காரர் என்ற பிருதோடு வடதேசத்திலிருந்து வீறுடன் திரும்பிய உடையவர் வாரணாசி வழியாக கங்கையைக் கிட்டி நீராடி, கண்டம் என்னும் கடிநகரில் எம்பெருமானைக் கைதொழுதார். வண்புருஷோத்தம் சென்று ஸ்ரீ ஜகந்நாதனையும் சேவித்தார்.

பூரி ஜகந்நாதத்தில் அவர் சில நாட்கள் தங்கி ஓய்வு கொண்டு, தமது அருமைச் சிஷ்யர் எம்பார் பெயரால் மடம் ஒன்றையும் அங்கு நிறுவினார். ஜகந்நாதரின் பூஜை முறைகளை, மாற்றும் முயற்சி மட்டும் அங்கு பலிக்கவில்லை.

பிறகு ஸ்ரீகூர்மம், சிம்மாத்ரி சேர்ந்து, சிம்மகிரி அப்பனைத் தொழுது, அங்கிருந்து புறச்சமயிகளை வாதில் வென்று திருத்தினார்.

அஹோபிலம் எழுந்தருளி, நரஸிம்ம மூர்த்திகளை மங்களாசாசனம் செய்தார்.

## அப்பனுக்கு ஆழியும் சங்கும்

வடக்கிலிருந்து திரும்புகையில் திருவேங்கடத்துக்கு எழுந்தருளினார் எம்பெருமானார். அங்கு வேதார்த்த சங்க்ரஹத்தையும் உபந்யாஸமாக அருளிச் செய்தார். உபநிஷத் சொற்களுக்குப் பொருள் கூறும் முறைகளைக் குறித்து அரிய பல நுட்பங்களை அதில் வெளியிட்டார்.

அவர் திருமலைக்கு வந்த சமயம் சைவ வைஷ்ணவ சச்சரவு அங்கு ஏற்பட்டிருந்தது.

**"தாழ்சடையும், நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்**
**சூழரவும் பொன்னாணும் தோன்றுமால் - சூழும்**
**திரண்டருவிபாயும் திருமலைமேல் எந்தைக்கு**
**இரண்டுருவும் ஒன்றாயிசைந்து"**

என்று பேயாழ்வார் பாசுரத்தை ஆதாரம் காட்டி, சைவர்கள் திருமலையில் இருப்பவன் சிவனே என்றார்கள், வைணவர்கள் விடுவார்களா?

அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறைமார்பா! என்று நம்மாழ்வார் பாசுரத்தைக் காட்டி, திருவொடு மருவிய மார்பன் ஸ்ரீநிவாசன் - எங்கள் விஷ்ணுவே என்றனர்.

இந்த சச்சரவுக்கு ஒரு முடிவு கட்ட இரு திறத்தாரையும் அழைத்து எம்பெருமானார் ஓர் ஏற்பாடு செய்தார்.

அதாவது உங்கள் சிவனுக்குச் சின்னமான திரிசூலம், டமருகத்தையும், எங்கள் பெருமாளுக்கேயுரிய சங்கு சக்கரங்களையும் திருவேங்கடவன் திருமுன் வைப்போம். அவர் எதை எடுத்து தரித்துக் கொள்ளுகிறாரோ, அதையிட்டு ஒரு முடிவுக்கு வந்து விட வேண்டும். பின்னர் பிணக்கு கூடாது. சம்மதமா? என்று கேட்டார்.

இரு கட்சியாரும் ஒப்புக் கொண்டனர். தங்கள் தங்கள் சின்னங்களை முதல் நாள் இரவு வைத்துக் கதவை பூட்டிவிட்டு முத்திரையிட்டுக் காத்திருந்தனர்.

மறுநாள் காலை, சுப்ரபாத ஸேவைக்குத் திருக்காப்பு நீக்குகையில் திருவேங்கடவன் ஆழி சங்கடத்துடன் காட்சி அளித்தான்.

எம்பெருமானுக்கு வாழித்திரு நாமம் பாடுவோர் “அப்பனுக்கு ஆழி சங்கம் அளித்தருள்வோன் வாழியோ என்று இச்சரிதத்தைக் குறித்தே பாடுகின்றனர். இத்தகைய பல அற்புத அருட்செயல்களையும் ஆற்றல் மிக்க அறிவுச் செயல்களையும் இமயம் முதல் குமரி வரை விஜய யாத்திரை செய்து பல இடங்களிலும் நிலை நாட்டி விட்டு, திக்குற்ற கீர்த்தியுடன் எம்பெருமானார் ஸ்ரீரங்கம் திரும்பினார்.

உடையவரின் வடநாட்டு விஜயத்தின் விளைவாக அங்கு வைஷ்ணவ வழிபாடுகள் தோன்றி, ‘பக்த விஜயம்’ கதைகள் பரவின. பல்வேறு வைஷ்ணவ வழிபாடுகள் தோன்றின.

## ஆழ்வான் குமாரர்

எம்பெருமானார் மிகவும் மதித்துப் போற்றிய சிஷ்யர் கூரத்து ஆழ்வான். செல்வச் செழிப்பை அறவழியில் அறவே செலவிட்டு, இல்லறத்தில் எளிய வாழ்வை விரும்பி ஏற்றுக் கொண்டவர். அந்தணருக்கு உரிய உஞ்சவிருத்தி (சிந்தியது கொண்டு ஜீவித்தல்) செய்தே பசியாற்றி வந்தார். நல்லோர் இல்லங்களில் சென்று அன்றாடம் தனக்கு வேண்டிய அளவு மட்டுமே அரிசி பெற்று வருவார். ஒருநாள் பகல் முழுதும் அடைமழை பெய்தது. ஆழ்வானால் வெளியில் புறப்பட முடியவில்லை. அன்று அவரும், அவரது தேவி ஆண்டாளும் பட்டினி, வீட்டில்

பகவானுக்கு ஒரு பழத்தை அமுது செய்வித்து, உணவின்றியே சயனித்து விட்டார்.

இரவு அரங்கன் கோயிலில் அரவணை மணி ஒலித்தது. ஆழ்வானின் பத்தினி ஆண்டாள் அவ்வொலிகள் கேட்டதும், ''பகவானே உன் பக்தர் இங்கு பட்டினிகிடக்க, நீர் மட்டும் அங்கே குலாவிக் குலாவி அமுது செய்தருளுகிறீர் போலும்!'' என்று எண்ணினார்.

கோயிலில் அரங்கன் திருவுள்ளத்தில் இது சென்று தைத்தது. உடனே ''உத்தம நம்பியை அழைத்து ஆழ்வான் பட்டினி கிடக்கிறார். உடனே பிரஸாதம் அனுப்பி வையும்'' என்று பணித்தான் அரங்கன்.

உத்தம நம்பியும் தலையில் அரவணைப் பிரஸாதம் தாங்கி, கோயில் மரியாதைகளுடன் சென்றார்.

இதென்ன திடீரென்று கோயில் தளிகை வருகிறதே என்று திகைத்தார் ஆழ்வான். உத்தம நம்பி நடந்ததைக் கூறினார். இது கிரயத் தளிகையாயிருக்கும் என்று தமக்கும் ஆண்டாளுக்குமாக இரண்டிரண்டு திரள்களை மட்டும் பெற்றுக் கொண்டு மீதத்தைத் திருப்பி அனுப்பி விட்டார்.

ஆண்டாளிடம் ஆழ்வான், ''நீ என்ன எண்ணினாய்'' என்று வினவினார். எண்ணினபடி சொன்னாள். ஆண்டாளை வெறுத்துச் சொல்லி, பிரஸாதத்தை இருவருமாக உட்கொண்டார்.

இந்த அரவணை ப்ரஸாதமே, ஸ்ரீ ஆண்டாள் திருவயிறு வாய்த்து பட்டரும் சீராமப் பிள்ளையும் அவதரிக்க ஹேதுவாயிற்று.

## ஸ்ரீ பராசரபட்டர்

நம்பெருமான் பிரஸாதத்தால் முதலில் வைகாசி,ஒரு குமாரர் தோன்றினார். பத்து நாளும் கடந்த இரண்டாம் நாள் எம்பெருமானார் ஆழ்வான் திருமாளிகைக்கு எம்பாருடன் வந்தார். ஆழ்வான் குமாரனைத் தம்மிடம் கொண்டு வருமாறு எம்பாரைப் பணித்தார். ஆண்டாளிடமிருந்து குழந்தையை எம்பார் எடுத்து வந்து உடையவரிடம் காட்ட, குழந்தையைக் குளிர நோக்கிக் கையில் வாங்கி, இதென்ன துவயம் மணக்கிறதே. எம்பாரே! என் செய்தீர்? என்றார். அவரும் சிசுவுக்குக் காப்பாக த்வயானுஸந்தானம் பண்ணிக் கொண்டு வந்தேன்'' என்றார்.

''செய்ய வேண்டியதை முந்திக் கொண்டு செய்து விட்டீர், நன்று என்று கொண்டாடி, இவர் உஜ்ஜீ வனத்துக்கு நீரே கடவீர் என்றும் நியமித்தார்.

ஐம்படைத்தாலி அணிவித்து எம்பார் திருக்கையாலேயே நாமகரண திருவிலச்சினை சாற்றுவித்து ஆளவந்தார் குறை நீங்க, "ஸ்ரீ பராசுர பட்டர்" என்று திருநாமம் சாத்தினார் உடையவர். பின்னர் பிறந்த ஆழ்வான் குமாரருக்கு வேதவியாஸ பட்டர் என்று பெயர் சூட்டினர்.

இப்படி ஆளவந்தாரின் மற்றொரு குறையும் நிறைவுறச் செய்தார் எம்பெருமானார். மேலும் சில நாளில் எம்பாரின் திருத்தம்பி சிறிய கோவிந்தப் பெருமாளுக்கு ஒரு குமாரர் அவதரிக்க, அதைச் செவியுற்று எம்பெருமானார் அங்கு எழுந்தருளி குழந்தைக்கு ஸ்ரீ பராங்குசநம்பி என்று நம்மாழ்வார் திருநாமம் சாற்றி, தம் குறையையும் நிறைவு செய்து கொண்டார்.

## பட்டர் பிரபாவம்

ஆழ்வான் குமாரர் பட்டர் திருவரங்கனின் ஸ்வீகார புத்திரராகவே கோயிலில் வளர்ந்தார். திருமணத்தூண் அருகே தொட்டி விட்டு, நாச்சியார் சீராட்டி வளர்க்க வளர்ந்தவர் பட்டர்.

ஐந்து பிரயாத்திலேயே அறிவுப் பொலிவைக் காட்டி நின்றார். ஏக ஸந்திக்கிராஹி - ஒரு தடவை சொன்னால் போதும் நெஞ்சில் நிறுத்திவிடும் ஆற்றல் உள்ளவர்.

ஒருநாள் சின்னஞ்சிறு பட்டர் வீதியில் விளையாடிக் கொண்டிருந்தார். அப்போது ஸ்ரீரங்கம் வீதியில் ஒரு பண்டிதன் பல்லக்கில் பவனி வந்து 'ஸர்வஜ்ஞ பட்டன் வந்தான்' என்று விருது பிடித்துச் சென்றான். அது கண்ட குழந்தை பட்டர், எம்பெருமானார் ஆழ்வான், ஆண்டான், அருளாளப் பெருமாள் எம்பெருமானார் எம்பார் முதலானோர் இருக்க இவர் யாராடா 'சர்வஜ்ஞ பட்டன்' என்று விருது ஊதி வருகிறான்! என்று இரு கைகளிலும் மண்ணை அள்ளிக் கொண்டு அவனருகில் சென்று 'நீர் ஸர்வஜ்ஞனல்லவா? இது எத்தனை மண்? சொல்லும்' என்றார்.

பண்டிதன் அதற்குப் பதில் சொல்ல வழி தெரியாது வாயடைத்து நின்றான்.

'கெடுவீர்! ஒரு கை மண் என்று சொல்லி விருது ஊதித்திரிய மாட்டாதே! அஜ்ஞானாய்விட்டீர், இனி உம்முடைய, சர்வஜ்ஞன் என்ற விருதையும் ஸம்பிரமத்தையும் விட்டுவிடும்" என்றார் சிறு மாமனிதரான பட்டர்.

"அறிவும், துணிவும் மிக்க இவ்வற்புதக் குழந்தை யார்?" என்று அப்பண்டிதன் கேட்க, ஆழ்வான் குமாரர் என்றார்கள் அங்கிருந்தோர்.

‘‘பறப்பதன் குட்டி தவழுமோ’’ என்று வியந்து, தம் பல்லக்கில் அமர்த்தி, ஆழ்வான் அகத்தில் குழந்தையைக் கொண்டு சேர்த்தான் பண்டிதன்.

குழந்தையின் சிறுச்சேவதத்தைக் கேட்டறிந்த பொன்னாச்சி ‘திருஷ்டி’ கழித்து, குழந்தையை மறைத்து வைத்தாள்.

பட்டரின் மேதை எம்பெருமானாரையும் வியப்பில் ஆழ்த்தியது. ஆழ்வான் எம்பார் இருவருமே பட்டருக்கு சகல ஞான நற்கலைகளையும் நல்கினர். திருவரங்கம் பெரிய கோயில் ஓர் பல்கலைக் கழகமாக விளங்கியது. பட்டர் அங்கு மற்றவர்க்குக் கிட்டாத பல சலுகைகளும் பெற்று, அரங்கனின் செல்லப் பிள்ளையாக வளர்ந்தார். எம்பெருமானார் தரிசனத்தின் முதிர்ச்சியில் இனியசுவையாயும், ஸ்ரீ வைஷ்ணவத்தின் வளம் மிக்க எதிர் காலத்தின் இளமைக் கிளர் ஒளியாயும் விளங்கினார் பட்டர்.

## வெல்லும் தவம்

உடையவர் ஸ்ரீ ராமாயணப் பிரவசனம் செய்து வந்தார். அதில் விபீக்ஷண சரணாகதி கட்டம் நடந்து கொண்டிருகையில் இடையில் பிள்ளை உறங்காவில்லி தாசர் எழுந்து நின்றார். உடையவரை நோக்கி, ‘ஸ்வாமி! விட வேண்டியவைகளைவிட்டு, பெருமாள் திருவடிகளையே எல்லாமாகப் பற்ற, விரைந்து வந்து ஆகாயத்தில் நின்ற விபீஷணாழ்வானையும் சந்தேகித்து, அடிப்போம் நொறுக்குவோம் என்று புறப்பட்டார்களே இராமன் குழுவினர், அப்படியிருக்க நீசனேன்’ உமது கோஷ்டியில் நிலைபெற்று இருக்க முடியுமோ? அடியேனும் உய்வு பெறுவது உறுதியாகுமோ?’ என்று ஐயத்துடன் உருக்கமாக கேட்டார் வில்லிதாசர்.

அது கேட்ட எம்பெருமானார் முகம் பூரண நிலவு போல் பொலிந்து, ‘பிள்ளாய்! அஞ்சாதே! கொள்ளும் நீர், அந்தப் பேற்றை நான் பெற்றேனாகில் நீரும் பெறுகிறீர். பெரிய நம்பி பெற்றவராகில் அடியேன் பெறுகிறேன். நம்மாழ்வார் பெற்றாராகில், நாதமுனி தொடக்கமாக வரும் ஞான பரம்பரையில் நாமும் பெறுகிறோம்!

‘ஆழ்வார் காட்டும் ஆதி பகவானும், சாதாரண வாழ்க்கை நடத்தும் பாகவதர்களும் ஒரு கோவையாக இத்தொடரில் பிணைந்து இருக்கிறார்கள் என்பதை ஏன் மறந்தீர்?’

கமுகுத் தோப்பில் பாயும் நீரை வாழையும் உண்டு வாழும் விபீஷணனோடு வந்த நால்வரை, வானரர் தடுத்த போது, தனித்துப்

பிரித்துத் தடுக்கவில்லையே, 'எத்தியிருப்பாரை வெல்லுமே,' மற்று அவரைச் சாத்தியிருப்பார் தவம். 'உம் தவம் என் தவத்துக்கு மேலானது' என்றார் உடையவர். இது கேட்டு உள்ளம் பூரித்தார் வில்லி.

## ஊமைக்குப் பரிவு

வில்லி தாசரை ஆட்கொண்ட இராமாநுஜரின் பெருங் கருணை வாய்ப்புலன் இல்லாத ஓர் ஊமைக்கும் கிட்டியது. ஊமையின் உள்ளத்தை நன்கு அறிந்த உடையவர் அவ்வூமையைத் தனி அறையில் அழைத்து வைத்துக் கொண்டு கதவைத் தாளிட்டு, சைகைகள் மூலம் சில உபதேசங்களை, அரும்பாடுபட்டு விளக்கிக் கொண்டிருந்தார். கதவு இடுக்கின் வழியாக, ஆழ்வான் இதை உற்றுக் கவனித்தார்.

"ஐயோ! நான் ஞானத்தாலே கெட்டேன் என்றார். உயர் குலத்தில் பிறந்த வேத சாஸ்திரம் பயின்று ஞானி என்று பெயரும் பெற்று, ஆசாரியனின் இத்தகைய பரிவை இழந்தேன்; படித்துக் கேட்டேன். ஒன்றும் அறியாத ஊமையாய் பிறந்திருந்தால், அடியேனுக்கும் எம்பெருமானார் இத்தகைய பரிவுகாட்டி உபதேசிப்பாரல்லவா?" என்றார்.

## வடுகநம்பி நிஷ்டை

உடையவரின் சிஷ்யர்கள் வடுக நம்பி மிகத் தீவிர இராமாநுஜ பக்தர். ஆந்திரர், உடையவர் பாதங்களே அவர் பணியும் இறைவன். இராமாநுஜருக்குப் பால் காய்ச்சுவது அவர் பணி; எம்பெருமானாரை எப்போதும் பின் தொடர்வார். கோயிலைக் கண்டால் இராமாநுஜர் காத தூரத்திலே கால் அணியைக் கழற்றி விடுவார். கோயில் தரிசனத்துக்குப் பின் மீண்டும் அணிந்து கொள்வார். வடுக நம்பி உடையவர் பாதுகைகளை ஒரு போதும் விட மாட்டார்.

திருவெள்ளறையில் ஒரு சமயம் இராமாநுஜர் திருவடி தொழுத போது அவரது அவதாரப் பெருமான் வரதராஜருடன் அவரது பாதரட்சைகளையும் சேர்த்து வடுக நம்பி மூட்டை கட்டிக் கொண்டிருந்தார். இதைப் பார்த்து விட்ட இராமாநுஜர் பதறிப் போனார். "வடுகா! இது அடுக்குமா?" என்றார் உடையவர்.

வடுகரோ அமைதியாக "என்ன செய்து விட்டேன் அப்படி தங்கள் தேவரில் எங்கள் தேவருக்கு வந்த குறை என்னவோ" என்று திருப்பிக் கேட்டார்.

வடுகரின் பக்தி கண்டு உடையவர் பதில் சொல்லாமல் பிரமித்து நின்றார்.

உடையவர் பெருமாளை சேவிக்கும் போது வடுகரோ உடையவரையே சேவித்துக் கொண்டிருப்பார். ஒரு சமயம் பவளவாய் கமலச் செங்கண் என்று தொண்டரடிப் பொடியாழ்வார் பாசுரம் சொல்லி 'வடுகா! பெருமாள் கண்ணழகைப் பார்த்தீரா?' என்றார் வடுக நம்பி என் அமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே' என்று திருப்பாணாழ்வார் பாசுரத்தால் பதில் சொல்லி விட்டார்.

மற்றொரு சமயம் வடுக நம்பி, இராமாநுஜருக்குப் பால் காய்ச்சிக் கொண்டிருக்கையில், வீதியில் பெருமாள் எழுந்தருளினார். உடையவர் வெளியில் சென்று சேவித்தார். "வடுகா! பெருமாள் சேவிக்க வா" என்று அவரையும் அழைத்தார்.

அந்தப் பெருமாளை சேவித்துக் கொண்டிருந்தால், எங்கள் பெருமாள் பால் அடுப்பில் போய்விடுமே என்று சொல்லி வெளியே வர மறுத்து விட்டார் வடுகர்.

## உண்மைத் தூய்மை

இராமாநுஜர் நாள்தோறும் காவேரிக்கு நீராடச் செல்லுகையில் தண்டு பவித்ரம் போன்ற ஆண்டான், ஆழ்வான் தோள்களில் கைவைத்துச் செல்வார். நீராடித் திரும்புகையில் ஈரத்துணியிட்டுஅவர்கள் திருமேனி தீண்டாமல் வருவார்.

இப்படி நீராடித் திரும்பும் போது ஒரு நாள் பிள்ளை உறங்காவில்லி உடையவரை அடிதொழுது எதிரில் நின்றார். உடனே தம் கையை வில்லியின் வெறுந்தோள் மீது வைத்த வண்ணம் நடந்து வந்தார்.

இதுபற்றி உடையவரைக் கேட்ட போது, "அகப்பற்று புறப் பற்று இரண்டும் அற்ற பரம பாகவதர் அவர்; அவரது ஸ்பரிசத்தால் நாம் தூய்மை பெறலாகும்" என்றார்.

பிள்ளை உறங்காவில்லி, அவரது மனைவி பொன்னாய்ச்சியார் அவர்களது தூய்மையை மடத்திலேயே சில சோதனைகளை நடத்திக் காட்டி, உடையவர் மற்றவர்களுக்கு நிரூபித்து உணர்த்தினார். (விரிவஞ்சி அவை விடலாயிற்று).

## பாகவதப் பெண்கள்

பண்டிதர்கள் போலவே பாமரர், ஆண்களோடு பெண்டிர் அனைவரும் யதிராஜனை அண்டியிருந்தனர். வில்லிதாசரின் மனைவி பொன்னாய்ச்சி, ஆழ்வான் பத்னி ஆண்டாள், பெரிய நம்பி குமாரத்தி அத்துழாய் இவர்கள்

உடையவர் சரித்திரத்தில் பெரும் பங்கு கொண்டனர். மற்றும் பல பெண்மணிகள் உண்டு. ஆண்டாள் சூடிக் கொடுத்தாள், திருப்பாவை பாடினாள் என்ற பெயர்களில் பலர், ஸ்ரீபெரும்பூதூர், திருப்பதி, திருக்கண்ணபுரம், திருநறையூர், திருவனந்தபுரம், திருவாட்டாறு, திருவண்பரிசாரம், மன்னார் கோயில், திருக்குடந்தை ஆகிய இடங்களிலிருந்து வந்த பெண்கள் ராமாநுஜ மடத்தில் பலவகைப் பணிகளைப் புரிந்து வந்தனர். யதிராஜவல்லி என்றே ஒரு பெண்ணுக்குப் பெயர்.

## குருவும் வணங்கிய சீடர்

ஒரு சமயம் காவேரியில் நீராடி சிஷ்யர்களோடு இராமாநுஜர் திரும்பி வந்து கொண்டிருந்தார். எதிரில் ஆசார்யர் பெரிய நம்பி வந்து கொண்டிருந்தார். அந்தப் பெரிய ஸ்ரீ வைஷ்ணவ கோஷ்டியைக் கண்டதும் பெரிய நம்பி ஸாஷ்டாங்கமாக விழுந்து தண்டனிட்டார். இராமாநுஜர் பேசாமல் இருந்து விட்டார். இதுபற்றிய பேச்சு எழுந்தது. இது பற்றி பெரிய நம்பியைக் கேட்ட போது, "நம் ஆளவந்தார் நினைவு எழுந்தது; தண்டனிட்டேன்" என்றார் நம்பி.

'குருவின் நினைவை அனுசரித்து அடியேனும் இருந்திட்டேன்' என்றார் உடையவர்.

உயர்ந்த குருக்களும், உத்தம சீடர்களும் புடைசூழ யதிராஜர் ஸ்ரீரங்கத்தை, தலைநகராகக் கொண்ட ஸ்ரீவைஷ்ணவ சாம்ராஜ்யத்தை மிகுந்த செல்வாக்குடன் நடத்தி வந்தார். சுமார் ஐம்பதாண்டுப் பணியில் அவர் கண்ட கனவெல்லாம் நனவாயிற்று எனலாம்.

## அவலம் சூழ்கிறது

ஸ்ரீ வைஷ்ணவத்துக்கு ஸ்ரீ பாஷ்யம் கோட்டையாக அமைந்து விட்டது. ஆழ்வார்களின் திருமால் நெறிக்கு இருந்த தத்துவ அடிப்படையை அது நன்கு எடுத்துக் காட்டியது. நாடெங்கும் விஜயம் செய்து, விசிஷ்டாத்வைதக் கொள்கையை உடையவர் வெற்றியுடன் நிலை நிறுத்தி வந்தார். அரங்கன் கோயிலை ஐம்பதாண்டுப் பணியில், பூலோக வைகுந்தமாக்கி வைத்திருந்தார் இராமாநுஜர். சைவப்பற்று மிகுந்த சோழ சக்ரவர்த்திக்கு இவை எரிச்சலை ஊட்டின. இராமாநுஜருக்கு எதிராக ஏதேனும் செய்தாக வேண்டும் என்று எண்ணினான்.

எங்குமுள்ள பண்டிதர்களை தன் சபைக்கு வரவழைத்தான். 'சிவனுக்கு மேல் தெய்வம் இல்லை' என்று சாசனம் எழுதி, அதில்

கையெழுத்திடுமாறு பணித்தான். அரச கட்டளைக்கு அஞ்சி பலர் கையெழுத்திட்டனர். அவன் கொடுத்த நிலத்துக்கும், பொன்னுக்கும் பொருளுக்கும் பட்டம் பதவி போன்றவற்றுக்கும் ஆசையுற்று மற்றும் பலர் கையொப்பம் தந்தனர். இப்படி இராமாநுஜருக்கு எதிராக கையெழுத்து இயக்கத்தை துவக்கி, சைவ சாம்ராஜ்யக் கோட்டை எழுப்பினான். இது பற்றி இராமாநுஜனடியார்கள் அச்சம் கொண்டனர்.

கூரத்து ஆழ்வானின் சிஷ்யன் ஒருவன் நாலூரான் என்பவன் சோழனின் அவையில் அமைச்சனாயிருந்தான். 'சக்கரவர்த்தியே! தங்கள் எத்தனை கையெழுத்து வாங்கினாலும் இராமாநுஜர், ஆழ்வான் போன்ற மஹான்கள் கையெழுத்தில்லாவிட்டால் உமது சாசனம் செல்லாக்காசு தான்' என்றான். அதன் விளைவு?

## சோழன் ஆணை

சோழ மன்னன் 'இராமாநுஜரை உடனே இங்கு கொண்டு வாருங்கள்' என்று ஆணை பிறப்பித்தான். அரசனின் ஆட்கள் ஸ்ரீரங்கம் விரைந்து மடத்தின் வாசலில் வந்து நின்றனர்.

ஏற்கனவே இராமாநுஜரின் அடியார்கள் எச்சரிக்கையாக இருந்தனர். ஒருவன் உள்ளே சென்று கூரத்து ஆழ்வான் காதில் ஏதோ ரகசியம் கூறினார். இப்போது இராமாநுஜர் நீராடவும் ஆழ்வான் பணிவிடை செய்யவுமாயிருந்தார்.

உடனே ஆழ்வான், நீரோட்டத்துக்குப்பின் அணிவதற்காக வைத்திருந்த உடையவரின் காவி உடையைத் தாம் அணிந்தார். முக்கோலையும் கையில் ஏந்தினார். உடையவரிடம் ஒன்றும் சொல்லாமலேயே வாசலில் நடந்தார். அதற்குள் ஆசார்யர் பெரிய நம்பிக்குத் தகவல் எட்டி, அவர் மடத்து வாசலுக்கு வந்து ஆழ்வானின் வேஷம் கண்டு அவருடன் புறப்பட்டு விட்டார்.

## வெள்ளை உடுத்தியது

ஆழ்வான் சென்றதுகூடத் தெரியாத இராமாநுஜர் நீராட்டத்துக்குப் பின் ஈரம் துடைத்து உலர்ந்த காவியுடையும், முக்கோலும் கொண்டு வர அங்குள்ளாரைப் பணித்தார். அவற்றை ஆழ்வான் அணிந்து சென்று நடந்தது கூறி, தேவரீர்! 'உடனே தப்பிவிட வேண்டும்' என்று விரைவுபடுத்தினர்.

ஆழ்வான் காவி உடுத்திச் சென்றதன் கருத்தை நொடியில் உணர்ந்து, அப்படியானால், ஆழ்வானின் வெள்ளையைத் தாருங்கள் என்று பெற்று, அதை உடுத்திப் புறப்பட்டார் உடையவர்.

உலகம் நன்கு அறிந்து அந்த மாபெருந்துறவி வெள்ளை உடை தரிக்கும் போதே, ஆழ்வானுக்கும் அவருடன் சென்றுள்ள ஆசார்யர் பெரிய நம்பிக்கும் என்ன கதி ஏற்படுமோ என்று அஞ்சினர். உடனிருந்தவர்கள் 'இனி ஒரு கணமும் தாமதியாமல் புறப்படும்' என்றனர்.

உடனே சென்று அரங்கனைத் திருவடி தொழுது விடை கொண்டனர். வெள்ளுடையில் மறைந்து சிஷ்யர்கள் சொல்படி இராமாநுஜர் விரைந்தார். அவரது உள்ளத்தில் புதிய நம்பிக்கை ஒளி வீசியது. "கொடுமை செய்யும் கூற்றமும் என் கோலாடி குறுகப் பெறா" என்று தலைமறைவுப் பயணத்தை அணுக்கச் சீடர்களுடன் தொடர்ந்தார். அப்போது அவருடன் முதலியாண்டான் முதலானார் நாற்பதைந்து பேர் சென்றனர்.

இராமாநுஜர் தப்பிவிட்டார். அரச சபைக்கு வந்தவர் கூரத்து ஆழ்வானே என்பது தெரிந்து அரசன் ஏமாற்றத்துடன் கோபமும் எய்தினான். நாடெங்கும் தேடி இராமாநுஜரைப் பிடிக்கும்படி உத்தரவிட்டான்.

சோழ ஆட்களுக்கு எட்டாமல் தமது சிஷ்யர்களோடு வெகு தந்திரமாகவும், வேகமாகவும் சென்று எல்லையைக் கடந்தார் இராமாநுஜர்.

ஸ்ரீஇராமாநுஜரின் கோஷ்டி நீலகிரிச் சாரலை அடைந்தது. அங்கிருந்த வேடர்கள் ஸ்ரீ வைஷ்ணவ அபிமானிகளாகத் தோன்றினார்; வியப்புடன் விசாரித்ததில்; நல்லான் சக்ரவர்த்தி என்பவரின் நற்புகழ் வெளிப்பட்டது.

## நல்லான் சீடர்கள்

திருமலை சக்ரவர்த்தி என்பவர் இராமாநுஜர் சிஷ்யருள் ஒருவர். அவர் ஒரு சமயம் ஆற்று வெள்ளத்தில் மிதந்து வந்த அனாதைப் பிரேதத்தைக் கண்டார்; அடையாளங்களைப் பார்த்தார். தோள்களில் சங்கு சக்கரப் பொறிகளை கொண்டு, ஒரு ஸ்ரீ வைஷ்ணவரின் திருமேனி அது என்று அறிந்தார். சகல மரியாதைகளுடன் ஸ்ரீ வைஷ்ணவ முறையில் தகனம் செய்தார்.

இதைக் கண்ட ஊரார் அந்தண குலத்தில் பிறந்த இவர் யாரோ ஊர் பேர் தெரியாத அனாதைப் பிணத்துக்கு இச்சடங்குகளைச் செய்யலாமா? என்று கேட்டு விசாரித்ததில் அது ஒரு தீண்டாதாரின் உடல் என்றும் தெரிய வந்தது.

உடனே ஊரார் கூடி, சாதி வரம்பு மீறிய செயலுக்காக, அவரை ஒதுக்கி வைத்தனர். அவ்வாறு ஒதுக்கி வைக்கப்பட்ட இராமாநுஜ சிஷ்யரைக் குறித்து அவ்வூர் கோயிலில் பகவான் அர்ச்சகர் மூலமாக ஆவேசித்து

“அவர் ஊருக்குப் பொல்லான், ஆனால் நமக்கு நல்லான்” என்றானாம். அன்று முதல் அவர் “நல்லான் சக்ரவர்த்தி” ஆனார். அத்தகைய நல்லானின் சிஷ்யர்களே அந்த வேடர்கள்.

இராமாநுஜரின் கோஷ்டி, அவ்வேடர் இருப்பிடம் செல்வதற்குச் சில நாட்களுக்கு முன்பே, ஸ்ரீரங்கத்திலிருந்து இராமாநுஜரை தேடிப் புறப்பட்ட ஒரு வைஷ்ணவர் அங்கு வந்து சேர்ந்தார்.

“நீர் எங்கிருந்து வருகிறீர்?” என்று வேடர்கள் அன்புடன் வினவினர். திருவரங்கத்திலிருந்து வருவதாக அவர் கூறியதும், “எம்பெருமானார் பாங்காக எழுந்தருளியிருக்கிறாரா? அரங்கனின் திரு குறையொன்று மின்றி உள்ளதா?” என்று வினவினார்.

வந்தவருக்கு துக்கம் மேலிட்டது. “அரங்கனும் ஆயிற்று; அவர் திருவும் ஆயிற்று” என்று வெறுத்துச் சொல்லி, “எம்பெருமானாரைத் துரத்திவிட்டு என்ன செல்வம் வேண்டிக் கிடக்கிறது அரங்கனுக்கு?” என்று ஓவென்று அழத் தொடங்கினார்.

வேடர்கள் திடுக்கிட்டு, “எம்பெருமானாருக்கு என்ன நேரிட்டது?” என்றனர்.

“இராமாநுஜர், சோழன் தொல்லையால் மேற்கு நோக்கிச் சிலருடன் புறப்பட்டார்; எங்கிருக்கிறார் என்பது புலப்படவில்லை. சோழன் வலை வீசித் தேடுகிறான். அந்த மஹானுக்கு என்ன நேர்ந்ததோ? எங்கு எப்படி இருக்கிறாரோ?” என்று திகில் தோற்றக் கூறினார் வந்தவர்.

## வேடர்கள் பரிவு

உடனே அவர்கள் தங்கள் வேலைகளை அப்படியே போட்டனர். இராமாநுஜரை மேற்குப் பகுதியெங்கும் தேடும் பணியை மேற்கொண்டனர். அப்போது இடைவிடாது அடைமழை பெய்தது. ஐந்து நாட்கள் மழையிலும், சேற்றிலும், குளிரிலுமாகத் தேடினர்.

ஐந்து நாள் கழித்து ஆறாம் இரவு மலையடிவாரத்தில் கொட்டும் மழையில் நடுங்கும் குளிரில் நள்ளிருட்டில் இராமாநுஜரின் கோஷ்டி தங்களுக்கு தங்கும் இடம் தேடி, வேடச் சேரியின் நெருப்பு ஒளி கண்டு அங்கு வந்து சேர்ந்தது.

‘மேலே செல்ல வழி எது? என்று கேட்டனர் வந்தவர்கள். நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்? இது வேடர் கேள்வி, ‘திருவரங்கம் பெரிய கோயிலிருந்து வருகிறோம்’ என்றனர் வந்தவர்கள். ‘எம்பெருமானார்

நலமா?' என்கிறான் வேடர் தலைவன். 'எம்பெருமானாரை உங்களுக்கு எப்படித் தெரியும்?' என்று பதிலுக்குக் கேட்கிறார் ஒரு சிஷ்யர். 'அவர் எங்கள் பரம ஆசாரியர். நாங்கள் அவரது சிஷ்யர்கள். நல்லான் சக்ரவர்த்தியின் திருவடி சார்ந்தவர்கள். எங்கள் குரு ஆணைப்படி எம்பெருமானார் திருவடிகளே சரணம் என்று இருப்பவர்கள் நாங்கள் அவரை நினைத்தே தொழில் செய்கிறோம்; தொண்டு செய்கிறோம் என்றனர் வேடர்.

உடனே ஸ்ரீ வைஷ்ணவர் "இதோ இருக்கிறாரே! இவர்தான் உங்கள் பரமாசாரியர்" என்று எம்பெருமானாரை விளக்கு ஒளியில் காட்டினார். இருளில் நின்ற அவரை விளக்கொளியில் கண்டபோது, அப்பொலிவில் வெறி பிடித்தவர்கள் போன்று மேல் விழுந்து அவர் திருவடிகளைப் பற்றிக் கொண்டு, அன்பு மேலிட்டு ஆனந்தக் கண்ணீர் பெருக்கினர் வேடர்கள்.

உடனே அவரை உபசரிக்கும் ஏற்பாடுகள் நடந்தன; தினை கொணர்ந்தனர். தேன் தந்தனர், தினையை வறுத்து இடித்து மாவாக்கித் தேனில் கலந்து அமுது செய்து இரவைக் கழித்தனர் இராமானுஜரின் குழுவினர்.

## கொங்குப் பிராட்டி

மறுநாள் காலை வேடர்கள் சூழ இராமானுஜர் கோஷ்டி கொங்கு நாட்டில் கொள்ளைக்களம் என்னும் ஊரை வந்தடைந்தது. கொங்கில் பிராட்டி என்னும் இராமானுஜ சிஷ்யை அங்கு தன் கணவருடன் வசித்து வந்தாள். வெள்ளை சாத்தியதால் உடையவரை அடையாளம் தெரியாது தயங்கினாள். உடன் வந்த ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு உணவு தயாரித்து உபசரித்தாள்.

ஸ்ரீரங்கத்தில் உடையவரிடம் தான் பெற்று வந்த திருவடிகளை அவள் பூசித்து வந்தாள். அந்த சோடுகளை அணிந்து, தாம் உடையவரே என்று அடையாளம் காட்டினார் இராமானுஜர். ஐயம் தெளிந்து கொங்கில் பிராட்டி ஆனந்தமடைந்தாள். அதுவரை இராமானுஜரின் திருவடிகளில் சேராத தன் கணவரையும் சேர்த்து வைத்தாள். உடையவர் ஆபத்தில் தப்பியது கேட்டு மகிழ்நதாள். இராமானுஜரும் வெள்ளை நீக்கி, காஷாய உடை தரித்து புறப்பட்டார்.

## ஹொய்ச்சள அரசன்

உடையவர் கோஷ்டி அங்கிருந்து மைசூர் மாநிலம் சென்று தொண்டனூர் சேர்ந்தது. ஹொய்ச்சள வமிசத்து அரசன் விட்டல தேவனின் தலைநகர்

அது. அவன் ஜைன மதத்தை தழுவியவன். அவனுக்கு ஜைன குருக்கள் பலர் இருந்தனர். அரசன் மகளை பேய் பிடித்து ஆட்டியது.

தொண்டனூர் நம்பி என்பவர் இராமாநுஜ சிஷ்யர்; பரம பாகவதர்; அவர் அரண்மனையில் அரசியிடம் உபாதனத்துக்குச் செல்வதுண்டு இராமாநுஜர் என்னும் மஹான் அப்போது தொண்டனூர் வந்துள்ளதைக் கூறி, அவர் அருளால் மகளின் பேய் விலகிவிடும் என்றார். இளமையிலேயே இராமாநுஜரின் அருளால், சோழசிற்றரசன் மகளைப் பிடித்த பேய் விலகியதையும் தெரிவித்தார்.

தன் மகளைப் பிடித்த பேயை விரட்ட ஜைன குருக்களுக்கு விருந்து வைத்து அழைத்தான் பிட்டிதேவன். அந்த விருந்தை ஜைன குருக்கள் ஏற்கவில்லை.

ஒரு சமயம் "டில்லி துருஷ்கன்" விட்டல தேவன் மீது படையெடுத்து சிறைபிடித்து அவன் கை விரலை நறுக்கி அங்கஹீனனாக்கி விட்டான். "உடலளவானது ஆத்மா" என்பது ஜைனக் கொள்கை. உடல் உறுப்பு குறைந்தவர்களிடம் உணவு கொள்வது கூடாது என்று மத அனுஷ்டானம் தடை செய்கிறதாம். ஆகவே ஜைன குருக்கள் அரசன் விருந்தை மறுத்து விட்டனர்.

அரசி அதுவே சமயம் என்று அரசனிடம் இராமாநுஜரின் வரவு பற்றிக் கூறி, அவரது மகிமைகளையும் எடுத்துரைத்து, அவரை வரவழைக்கலாம என்றாள். அரசனும் இசைந்தான்; இராமாநுஜரை அழைத்தான். முதலில் இராமாநுஜர் தயங்கினார். தொண்டனூர் நம்பி வற்புறுத்தவே இசைந்து சென்றார்.

உடையவர் ஸ்ரீ பாததீர்த்தம் அரசன் மகளது பேயை விலக்கியது இராமாநுஜரின் தோற்றப் பொலிவு, அறிவுக் கூர்மை, ஒழுக்கச் சிறப்பு, ஆத்ம குணங்கள், இனிய பேச்சு, அதிசய ஆற்றல், அருள் நோக்கு எல்லாம் அரசனைக் கவர்ந்தது. அவர் அடிபணிந்து தனக்கு உய்வு வேண்டினான். பிட்டி தேவனை விஷ்ணுவர்த்தனாகத் திருத்தினார். அங்கு சோழ அரசன் வெறுப்புடன் விரட்டினான்; இங்கு மைசூர் மன்னன் அன்போடு உடையவரை ஏற்றுக் கொண்டான்.

அப்போதே ஜைன பண்டிதர்கள் இராமாநுஜரை எதிர்த்துக் கிளர்ந்தெழுந்தனர். வாதத்துக்கு அழைத்தனர். வாதத்தில் தோற்றால் தாங்கள் கழுவில் ஏறுவதாகவும் அரசனிடம் கூறினர். முரட்டுத்தர்க்கவாதிகளிடம் இராமாநுஜர் தன் திறனெல்லாம் காட்டி,

வாதில் வென்றிட்டார். தோற்ற ஜைனர் பலர் இராமாநுஜ மதத்தை தழுவினர். சிலர் பிடிவாதமாகத் தற்கொலை செய்து மாய்ந்தனர்.

## திருநாராயணபுரம்

மைசூர் பகுதியில் யாதவாத்ரி அருகே துளசிக்காட்டில் நடந்து சென்றபோது இராமாநுஜர் ஒரு புற்றுக்குள் பகவானின் திருமேனி திகழ்வதைக் கண்டார். முஸ்லிம் படையெடுப்புக்கு அஞ்சி பெருமாளை மறைத்து வைத்ததாக முதியவர்கள் சொன்னார்கள்.

இராமாநுஜருடன் வந்து விஷ்ணுவர்த்தனன் பெருமாளுக்கு கோயில் கட்ட முனைந்தான். பெரிய குளமும் வெட்டினான். இராமாநுஜரின் மேற்பார்வையில் திருநாராயணபுரம் சீரும் சிறப்புமாக அமைந்தது. கல்யாணசரஸ், பால் ஆறு போல் பொங்கி வெண்மையான திருமண் தந்தது. அம்மண்ணை நெற்றியில், அணிவதற்கு ஏற்றதாகத் திருத்தினார் உடையவர்.

மூலவர் திருநாராயணன் மட்டுமே புதரிலிருந்து கிடைத்தார். உற்சவரைக் காணவில்லை. விடாமல் தொடர்ந்து; விசாரித்ததில் டில்லி அரசனிடம் இருப்பதாகத் தெரிந்தது. விட்டல தேவன் உதவியுடன் டில்லி சென்றார் இராமாநுஜர். அரசனுடன் வந்த முனிவரை மதிப்புடன் வரவேற்றான் டில்லி அரசன். 'ராமப்பிரியன்' என்ற உற்சவர் அரண்மனை உள்ளதாயும் தமக்குத் தர வேண்டும் என்று உடையவர் கேட்டார்.

## செல்லப் பிள்ளை

அரசப் பெண்கள் அன்புடன் வைத்துக் கொண்டிருந்த ராமப்ரியனை இராமாநுஜர் முடிந்தால் அழைத்துச் செல்லலாம் என்றான் டில்லி அரசன். இராமாநுஜர் சளைக்கவில்லை; அன்பு மேலிட்டுப் பரிவுடன் கண்களில் நீர் வழிய என் அருமைச் செல்வப் பிள்ளாய் வருக! வருக! நம்பீ இங்கே வருக !!! என்று கூவி அழைத்தார். அர்ச்சை குலைத்து சலங்கை ஒலிக்க நடந்து வந்து யதிராஜரைத் தழுவி நின்றான் சம்பத் குமாரன் அன்புடன் அணைத்து மடியில் அமர்த்திக் கொண்டு, யதிராஜர் பல்லக்கில் மைசூருக்குப் புறப்பட்டார்.

திருநாராயணபுரத்தை நெருங்குகையில் வழியில் கொள்ளைக் கூட்டம் ஒன்று இராமாநுஜரை வழிமறித்து செல்வப் பிள்ளையை நகைகளுடன் கடத்திச் செல்ல முயன்றது. அப்போது அப்பகுதியில் வசித்து வந்த பறைச்சேரியினர் இராமாநுஜரின் உதவிக்கு வந்து அவரை மீட்டு செல்வப் பிள்ளையுடன் ஜீயருக்கு துணை வந்து கோயிலில் கொண்டு விட்டனர்.

## திருக்குலத்தார்

தீண்டாத குலத்தினர் (ஹரிஜன்) செய்த நல் உதவிக்கு நன்றியோடு, அவர்களது பிற்பட்ட நிலைகண்டு இரங்கி, இராமானுஜர் அவர்களுக்கு 'திருக்குலத்தார்' என்று பெயரிட்டு மதிப்புடன் அழைத்து, பலபடியாக உதவினார். கடுமையான வைதிக எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல் அவர்களுக்கு கோயிலுக்குள் சென்று இறைவனைத் தொழும் உரிமையையும் சில நிபந்தனைகளுடன் பெற்றுக் கொடுத்தார்.

(சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு (முன்பே இராமானுஜர் முயற்சியால் திருக்குலத்தார் ஆலயம் தொழும் உரிமை பெற்றனர் என்பது பின்னர் வந்த காந்தியடிகளின் ஹரிஜன இயக்கத்துக்கும் ஆலயப் பிரவேசத்துக்கும் வழி காட்டின)

## உடையவர் சமுதாயப் பணி

ஹொய்ச்சள மன்னனின் தலைநகர். தொண்டனூருக்குத் தமது எண்பது பிராயத்துக்குமேல் எழுந்தருளியினர் இராமானுஜர். தொண்டனூரில் பல மடங்களை அமைத்து, வைஷ்ணவ பிரசாரத்தை விரிவாகவும், வேகமாகவும், வலிவாகவும் செய்து வந்தார். சுமார் முந்நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்பு வரை அதே வேகத்தோடு அப்பிரசாரம் தொடர்ந்தது எனலாம்.

## மோதி தலாப்

எழுநூறு மடங்கள் இத்தகைய பிரசாரத்தில் ஈடுபட்டிருந்தன. மக்களின் குடிநீர் வசதிக்காக இராமானுஜர் நீர் தேக்கத் திட்டமொன்றையும் நிறைவேற்றி வைத்தார். மூன்று புரம் மலைகளால் முக்கோண வடிவில் அமைந்த பள்ளத்தாக்கில் பாயும் நீரைத் தேக்கி, மோதி தலாப் (முத்து ஏரி) என்று இக்காலத்தில் கூறப் பெறும் ஏரியை அன்று திட்டமிட்டு அமைத்தவர் இராமானுஜரே. இராமானுஜரின் சமுதாயப் பணிக்கு தொண்டனூர் ஏரி ஓர் ஒப்பற்ற எடுத்துக்காட்டாகும்.

இரண்டரை மைல் நீளமும் ஒரு மைல் குறுக்களவும் கொண்டு இந்த ஏரி இன்றளவும் பலரது உடலின் தாகத்தைத் தணித்து வருகிறது; உடையவரின் அருள் வெள்ளமோ பலரது உயிரின் தாபத்தை போக்கி, விவசாயிகளுக்கும் வாழ்வு அளித்து வருகிறது.

## எம்பெருமானார் தரிசனம்

**லஷ்மி நாதாக்ய ஸிந்தௌ சடரிபு**
**ஜலத; ப்ராப்ய காருண்ய நீரம்**
**நாதாத்ரவப்யஷிஞ்சந் ததநு**
**ரகுவராம் போஜ சக்ஷுர் ஜலாப்யாம்**
**கத்வாதாம் யாமுநாக்யம் ஸரிதமத**
**யதீந்தராக்ய பத்மாக ரேந்த்ராம்**
**ஸம்பூர்ய ப்ராணி ஸஸ்யே ப்ரவஹறதே**
**பஹுதா தேசிகேந்த்ர ப்ரமேகை;**

லக்ஷ்மீநாதானாகிற பெருங்கடலில் நம்மாழ்வாராகிற காளமேகம் படிந்து, காருண்யமாகிற நீரைப்பருகி, ஸ்ரீமந்நாத முனிகளாகிற மலையின் மீது பொழிந்தது. அங்கிருந்து உய்யக் கொண்டார், மணக்கால் நம்பிகளாகிற அருவிகள் வழியாக ஆளவந்தாராகிற பேராற்றிலே சேர்ந்து, அனந்தரம் எம்பெருமானாராகிற பெரிய ஏரியிலே தேங்கிற்று; பிறகு எழுபத்து நான்கு ஸிம்மாஸனாதி பதிகளாகிற ஸர்வேசுவரனுடைய க்ருபாரஸம் ஸகல சேதனரிடமித்திலும் பாயும்படி செய்து ஸித்தாந்தத்தை வளர்த்து வந்த படியால்தான் நம் பெருமாள் இதற்கு 'எம்பெருமானார் தரிசனம்' என்று பேரிட்டதாக மணவாள மாமுனிகள் அருளிச் செய்தார். தமிழகத்தின் நடுநாட்டு வீராணத்து ஏரி இதற்கு ஓர் எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது.

## மாபெரும் தியாகிகள்

எம்பெருமானார் ஸ்ரீரங்கத்தை விட்டுப் பிரிந்ததும், சோழனின் சபைக்குச் சென்ற கூரத்தாழ்வானும், பெரிய நம்பியும் என்னவாயினர்? என்பது பற்றி அரும்பாடு பட்டு தகவல் சேகரித்தார் இராமானுஜர்

பல ஆண்டுகள் கழித்து, அவருக்கு எட்டிய தகவல் அவரைத் திடுக்கிடத் செய்தது.

கூரேசர் காவியுடையில், கங்கை கொண்ட சோழபுரத்தில் சோழன் சபையை அடைந்தார்; முதியவர் பெரிய நம்பியும் அவரைத் தொடர்ந்து எழுந்தருளினார். உடையவரின் உடன்பிறப்பு எனத்தக்க அத்துழாயும் தந்தையைப் பின் தொடர்ந்தார்.

கூரேசரை முதலில் இராமானுஜர் என்றே எண்ணி அரசன் தக்க ஆசனம் அளித்தான். அங்கிருந்த நாலூரான் ''இவர் இராமானுஜர் அல்லர்; ஆயினும் அவருக்க குறையாத பேர் அறிவும் அற்புத ஆற்றலும் நுண்ணறிவும் சீலமும் உள்ளவர்'' என்று அரசன் காதில் சொன்னான்.

அரசன் தன் ஆட்களை முனிந்தான். இராமாநுஜரை விட்டு விட்டீர்களே - உடனே அவரைக் கொண்டு வர ஏற்பாடுகள் செய்து, 'நீங்கள் இருவரும் இந்த சாசனத்தைப் படித்துக் கையெழுத்து இடுங்கள்' என்றான்.

## கூரேச விஜயம்

ஆழ்வான் அரசனின் அசட்டுத்தனத்தைக் கண்டு சிரித்து, அதை வாங்கிப் படித்தார். அதில் "சிவாத் பரதரம் நாஸ்தி" (சிவனுக்கு மேல் உயர்ந்த பொருள் இல்லை) என்று இருந்தது.

உடனே கையெழுத்திடுவதற்காகத் தன்னிடம் கொடுத்த எழுத்தாணி கொண்டு அவ்வோலையிலேயே "துரோணம் அஸ்தி தத பரம்" என்று கையெழுத்திட்டு அரசனிடம் கொடுத்தார்.

'சிவம்' என்றால் குருணி (ஒரு மரக்கால்) 'துரோணம்' என்றால் பதக்கு (இரண்டு மரக்கால்) குருணிக்கு மேல் பதக்கு பெரிது என்பதுதான் கூரத்து ஆழ்வான் ஏளனமாகக் குறிப்பிட்டு எழுதிக் கையெழுத்திட்டது.

இதைக் கண்டதும் சோழனின் வெறி தலைக்கேறி விட்டது எரிகிற நெருப்பில் நெய்விட்டது போல ஆயிற்று. 'இவருடைய கண்களைப் பிடுங்கி எறியுங்கள்' என்று உத்தரவிட்டான்.

ஆழ்வானே "பாவீ, உன்னைப் பார்த்த கண்களை நானே பிடுங்கி எறிந்து விடுகிறேன்" என்று கூறி தம் நகங்களினால் விழிகளைக் கீண்டு எறிந்து விட்டார்.

அரசன் அடுத்து பெரிய நம்பியைப் பார்த்து, 'நீர் என்ன செய்கிறீர்! ஒழுங்காகக் கையெழுத்திடும்' என்று ஓலையைக் கொடுத்தான், அவர் அதைக் கையில் வாங்கவும் மறுத்து விட்டார். அவரது கண்களையும் பறித்து விடுமாறு கூறிவிட்டு, ஆத்திரத்துடன் சபையை விட்டுப் போய்விட்டான் சோழன்.

அரசனின் ஏவலாட்கள் பெரிய நம்பியைத் தனியிடத்துக்கு அழைத்துச் சென்று, கண்களைப் பிடுங்கி விட்டார்கள். அத்துழாய் அலறித் துடித்தாள். கண்ணிழந்த தந்தையைக் கையைப் பிடித்து மெல்ல நடத்தி, சபையை விட்டுச் சென்றாள்.

## பாலையில் சோலை

தரிசனத்துக்காகத் தன் தரிசனத்தை (கண்ணை) இழந்தார் ஆழ்வான்! 'இந்த இடத்திலிருந்து நான் வெளியே போக வேண்டும், இங்கு இந்த

பாகவத தருமத்துக்குத் துணை வருவார் ஒருவரும் இல்லையா?' என்று ஏக்கத்துடன் கேட்டார் அவர்.

'இதோ நான் வருகிறேன்' என்று ஒலித்தது ஒரு வீரப் பெண்ணின் மணிக்குரல். அவள் வேறு யாருமல்ல; அந்த சோழ மன்னனின் வாளை ஏந்தி, உடன் வரும் ஒரு பணிப் பெண்தான்.

தன் கை வாளை வீசி எறிந்து ஆழ்வானின் கையைப் பற்றி அழைத்துச் சென்றாள். தக்க மருத்துவரை நாடி சிகிச்சை செய்தாள். இதே இடத்தில் கண் இழந்த தந்தையோட அத்துழாயும் வந்து சேர்ந்தாள்.

'இந்தப் புறக் கண்கள் போனால் போகட்டுமே; தரிசனத்தின் அகக்கண்ணான எம்பெருமானாரைத் தப்ப வைத்தோமே என மகிழ்ந்தனர் ஆழ்வானும் பெரிய நம்பியும்.

அந்த இரு மஹான்களும் சுற்றியிருந்தவர்ககளிடம் அன்புடன் பேசி, பரிவுடன் நடந்து கொண்டதால் சோழனின் ஆட்களும், அவர்களது மகத்தான தியாகத்தை, அழுத்தமான கொள்கையை, தெளிவான வாக்கைக் கண்டு அவர்களது காலில் விழுந்து வணங்கினாராம்.

## உயிர்த் தியாகம்

நூற்றி ஐந்து வயது நிரம்பிய நம்பியால், கண்களை இழந்த அதிர்ச்சியைத் தாள முடியவில்லை. ஆழ்வான் மடியில் தலையை வைத்து மகள் அத்துழாயின் மடியில் கால்களை நீட்டித் தரையில் கிடந்தார். பிராணன் பிரியும் நிலையில் துடித்தது.

"நீர் பிறந்த திருவரங்கம் இருக்க, அந்தப் பெருமாளும் இருக்க உடையவரும் இருக்க, இங்கு இப்படி கங்கை கொண்ட சோழபுரம்தானா உமக்கு உயிரை விட இடமாயிற்று?" என்று கதறினாள் அத்துழாய்.

அதைக் கேட்ட நம்பி சிறிது தெளிந்து, "பாகதர் மடியைக் காட்டிலும், திருவரங்கம் பெரிதோ?" என்று கூறிவிட்டு "ஆளவந்தார் திருவடிகளே சரணம்!" என்று சொல்லிய வண்ணம் திருநாட்டுக்கு எழுந்தருளி விட்டார். பெரிய நம்பிக்கு அவ்வூர் ஸ்ரீ வைஷ்ணவர்ககள் உரிய முறையில் "பிரம்ம மேத ஸம்ஸ்காரம்" செய்தனர். ஆழ்வானையும் இரவோடு இரவாக ஸ்ரீரங்கம் கொண்டு சேர்த்தனர்.

## ஆழ்வானின் ஆசார்ய பக்தி

கண் இழந்த கூரத்து ஆழ்வான் ஒரு சமயம் உடல் நிலை தேறி, அரங்கனை நேரில் சென்று வாழ்த்த கோயிலுக்குச் சென்றார். அங்கு

‘‘இராமாநுஜரைச் சேர்ந்தோர் கோயிலுக்குள் செல்லக்கூடாது’’ என்பது அரசன் கட்டளை என்றான் காவலாளி. ஆயினும் ஆழ்வானை அவரது நற்பண்பு கருதி, அனுமதிக்க இசைவு தெரிவித்தனர். ஆனால் ஆழ்வான் ‘‘இராமாநுஜர் உறவை’’ அறுத்துக் கொண்டு எனக்கு அரங்கன் சேவை ‘‘தேவையில்லை’’ என்று சொல்லித் திரும்பி விட்டார்.

இச்செய்திகளைக் கேட்ட போது எம்பெருமானார் வேரற்ற மரம்போல் சாய்ந்தார். சிறிது பொழுது மூச்சற்றுக் கிடந்தார். பிறகு துடித்து அலறினார். முடிவில் ஒருவாறு தேறி, ஆழ்வானையாவது திருமேனியோடு இருக்கப் பெற்றோமே என்று ஆறுதலுற்றார்.

கண்ணிழந்து ஸ்ரீரங்கம் சேர்ந்து ஆழ்வான் எம்பெருமானாரில்லாத குறையை மறக்க இடையில் திருமாலிருஞ்சோலை சென்று கள்ளழகர் சந்நிதியில் தங்கினார். அப்போது சுந்தரபாஹுஸ்தவம் என்னும் ஸ்தோத்திரம் அருளிச் செய்தார். மீண்டும் ஸ்ரீரங்கம் எழுந்தருளினார்.

## ஆழ்வானுக்குச் செய்தி

எம்பெருமானார், மற்றொன்றிலா மாருதிச் சிறியாண்டானை அழைத்து, ‘‘நீர் இப்போதே திருவரங்கம் சென்று, ஆழ்வான் அரங்கத்தின் சூழ்நிலை அனைத்தையும் அறிந்து வாரும்’’ என்று சொல்லி அனுப்பினார்.

திருவரங்கம் வந்து சேர்ந்த மாருதியாண்டான் குரலிலிருந்து உடையவர் அனுப்பி தம்மிடம் வந்தவர் என்று தெரிந்து ஆனந்தம் கொண்டார் ஆழ்வான்.

எம்பெருமானார் மேல் நாட்டில் (மைசூர் பகுதியில்) எப்படி இருக்கிறார்? என்ன செய்கிறார் என்றெல்லாம் வெகு ஆவலோடு விசாரித்தார் ஆழ்வான். ஸ்ரீரங்கம் இழந்து விட்ட செல்வத்தைப் பெற்று மைசூர் பகுதி ஸ்ரீ வைஷ்ணவப் பொலிவுடன் திகழ்கிறது என்றார் ஆண்டான். அங்கே ஒரு புதிய அரங்கம் உருவாகி விட்டது என்றார். (பத்துப் பதினைந்து ஆண்டுகளுக்கு எம்பெருமானார் மைசூர் பகுதியில் செய்துள்ள தொண்டுகளை விவரித்தால் பெரிய நூல் உருவாகும்)

திருநாராயணபுரம் கோயில் நிர்வாகம் சீராக நடைபெற எம்பெருமானார் பல ஏற்பாடுகளைச் செய்தார். (அதன் முழு விவரமும் பின்னர் தனி நூலாக வந்துள்ளது)

ஐம்பத்திரண்டு பேரை கோயில் ஊழியத்தில் நியமித்து அவர்களுக்குத் தேவையானவற்றைப் பெற்றுத் தந்தார். அவ்வூரில் பழுதுற்ற சிவன் கோயிலையும், திருத்தி வைத்து செவ்வனே நடைபெற வழி வகுத்தார்.

தமக்குப் பின் திருநாராயணபுரத்தில், கோயில் நிர்வாகத்தை ஏற்று நடத்த மடம் நிறுவி, ஜீயரையும் நியமித்தார். அவருக்குள்ள கடமைகளையும் விளக்கி, கடமை தவறினால் அடைய வேண்டிய தண்டனையையும் கூடக் குறிப்பிட்டுள்ளார். அதாவது கடமை தவறிய ஜீயர், கோயில் கோபுரத்தில் ஏறி, கீழே விழுந்து பிராணனை முடித்துக் கொள்ளலாம் என்று குறிப்பிட்டுள்ளாராம்.

## கிருமிகண்ட சோழன் மாண்டான்

கூரத்தாழ்வானைப் பிரிந்து மற்றொன்றில்லா மாருதிச் சிறியாண்டான் திருநாராயணபுரம் புறப்பட்டார். அச்சமயம் 'சோழ ராஜா' கழுத்தில் கண்டாமலை நோயுற்று 'புழுத்து மாண்டான்' என்று சிலர் செய்தி சொன்னார்கள்.

அச்செய்தியை உறுதி செய்து கொள்ளுவதற்காக உடனே அவர் கங்கை கொண்ட சோழபுரம் சென்றார். அங்கு அம்மங்கி அம்மாள் என்ற பெயருடைய ஸ்ரீ வைஷ்ணவரும் ஆண்டானுடன் சேர்ந்து கொண்டார் இருவரும் அவலச் சோழன் கழுத்தில் புழுத்துச் செத்தான் என்ற இச்செய்தியை இராமாநுஜரிடம் சென்று தெரிவித்தனர்.

## தமர் உகந்த திருமேனி

திருநாராயணபுரத்துச் சீடர்கள் மகிழ்ந்தனர். இராமாநுஜரோ ஆழ்வானை இனி ஒரு கணமும் பிரிந்திருக்க இயலாது என்று உடனே ஸ்ரீரங்கம் புறப்பட முனைந்தார். திருநாராயணபுரத்திலிருந்த ஐம்பத்திரண்டு பேரையும் அழைத்து சீரும் சிறப்பும் குன்றாமல் செல்லப் பிள்ளையைக் காப்பது உங்கள் கடமை என்று சொல்லிவிட்டு விடை பெற்றார்.

உடையவர் பிரிவை சகியாது கண்ணீர் விட்டனர் சிஷ்யர்கள். அவர்களுக்கு ஆறுதலாகத் தம்மைப் போல் ஒரு விக்ரகம் செய்து, அதைத் தழுவி அவர்களுக்கு அளித்தார். 'தமர் உகந்த திருமேனியாக இன்றும் அங்கு ஆராதிக்கப் பெறுகிறது அந்த விக்ரஹம்.'

## ஸ்ரீரங்கம் மீண்டார்

உடையவருக்குப் பிரியா விடை கொடுத்தனர் திருநாராயணபுரத்தார். சில வாரங்களில் ஸ்ரீரங்கம் சேர்ந்தார் உடையவர். "ஆழ்வானே! உமக்கு இப்படி நேரலாமோ?" என்று தழுதழுத்த குரலில் கேட்டு ஆழ்வானைக் கட்டி அணைத்துக் கண்ணீர் விட்டார் எம்பெருமானார்.

“எப்போதேனும் யாரேனும் அடியார் திருநெற்றியில் திருமண் கோணலாயிருக்கிறதே என்று எண்ணியிருப்பேன். பாகவதாபசாரப் பட்டிருப்பேன். கண்ணைப் பறித்திட்டான் எம்பெருமான்!” என்று சமாதானம் சொன்னார் ஆழ்வான்.

‘இல்லை; பாபம் உம்மை நலிந்தது’ என்றார் எம்பெருமானார். ‘எம்பெருமானார் திருவடி சம்பந்தம் பெற்றவருக்குப் பாபம் விலகிப் போகிறதே! எம்பெருமானாரும் பாபத்துக்கும் என்ன சம்பந்தம்? தேவரீர் அளித்துள்ள ஞானக்கண்கள் தெளிவாக இருக்க ஊனக் கண்ணால் ஆவதென்ன! போனால் போகட்டும்’, என்றார் ஆழ்வான்.

உடையவர் விடாமல் ஆழ்வானின் கையைப் பற்றிக் கொண்டு தம் ஆராதனைப் பெருமாள் முன்போய் நின்று “இழந்த கண்ணைத் தருமாறு கேளும்” என்றார்.

## ஆழ்வான் பிரார்த்தனை

ஆழ்வான் அப்போது ‘வரதராஜ ஸ்தவம்’ என்னும் அற்புதமான ஸ்தோத்திரத்தை அருளிச் செய்தார். அதில் அவர் ‘நித்யமான ஞானக்கண்களைத் தமக்குத் தந்தருளுமாறுதான் வேண்டினார். அதாவது ஸதா பச்யந்திஸூரய (எப்போதும் அவனையே பார்க்கின்றனர் அமரர்)’ என்ற வைகுந்த வாழ்வையே வேண்டினார் ஆழ்வான்.

எம்பெருமனார் அருளாளனிடம் அழைத்துச் சென்றார் வரதராஜன் முன்னிலையில் தமது ஸ்தோத்திரத்தை அனுஸந்தித்தார். அப்போது உடையவர் சிறிது பராக்காயிருந்து விட்டார்.

## அருளாளன் அளித்த வரம்

அதற்குள் காஞ்சி பேரருளாளன் “ஆழ்வானே உம் துதி கேட்டு மகிழ்ந்தோம். வேண்டும் வரம் கேளும்” என்றான். அர்ச்சகர் முகமாக, “நான் பெற்ற பேறு நாலூரானும் பெற வேணும் இதுவே நான் வேண்டும் வரம்” என்றார் ஆழ்வான்.

உடையவர் காதிலும் ஆழ்வான் குரல் ஒலித்தது. என்ன திருவுள்ளம். “தாம் கண் இழப்பதற்குக் காரணமாயிருந்த அந்த மகாபாபியிடமும் இவர் கருணை கொண்டு பரிவு காட்டும் பண்பை என்னென்பது? இக்கருணைக்கு ஈடு இணையுண்டோ?” என்று இதயம் விம்மி வியந்தார்.

நல்ல குருவின் தொடர்பால் சிஷ்யன் உயர்ந்து போகின்றான் என்பதுதான் உலக வழக்கு. ஆனால் ஆழ்வான் போன்ற உத்தம சிஷ்யரால் அவரது ஆசார்யரும் உய்வு பெறுகின்றனர் என்பதுதான் உண்மை இதை நிரூபிக்கிறார் ஆழ்வான் என்று அன்பு மேலீட்டால் அவரைத் தழுவிக் கொண்டார் உடையவர்.

ஆழ்வவான் தொடர்பால் தமக்கு நல்ல கதி நிச்சயம் என்று மகிழ்ச்சி பொங்க உத்தரீபயத்தை தலைக்கு மேல் வீசி கோஷமிட்டாராம் எம்பெருமான்.

## பிற்கால ஏற்பாடு

மைசூர் மாநிலத்திலிருந்து தமிழகம் மீண்ட எம்பெருமானார் நூறுவயதில் சற்றுத் தளர்ந்திருந்தார். தாம் ஸ்ரீரங்கம் மீள்வதற்குள் தமக்கு ஆசார்யர்களும் ஆளவந்தார் சிஷ்யர்களுமான, திருக்கோட்டியூர் நம்பி, திருமாலையாண்டான், திருவரங்கப் பெருமாள் அரையர், திருக்கச்சி நம்பி, திருமலை நம்பி போன்ற பெரியவர்கள் திருநாட்டுக்கு எழுந்தருளி விட்டனர்.

பிள்ளை உறங்காவில்லிதாசர் போன்ற வயதான சிஷ்யர்களும் வைகுந்தமேறச் சென்றிட்டனர்.

தமக்குப் பின் தரிசன நிர்வாக ஏற்பாடுகளைக் கவனிக்கும் பணியில் எம்பெருமானின் திருவுள்ளம் திரும்பியது.

## சிஷ்யச் செல்வம்

தமது பல்லாயிரக்கணக்கான சிஷ்யர்களுள் எழுபத்து நான்கு பேரைத் தேர்ந்தெடுத்தார். உடையவரின் சிஷ்யர்களுள் பதினோராயிரம் பேர் உபவீதம் (பூணூல்) அணிந்தவர்கள். பன்னீராயிரம் பேர் பூணூல் அணியாதவர்கள், பன்னீராயிரம் பேர் பாகவத நிஷ்டர். இது தவிர பல்லாயிரம் பேர் அவர்களைச் சார்ந்து நின்றனர் என்று படிப்படியாக கணக்குச் சொல்வர்.

கூரத்தாழ்வானும், முதலியாண்டானும், நடாதூராழ்வானும், பட்டர்வர்க்கமும், ஸ்ரீ பாஷ்யத்துக்குத் துணையாவர். அருளாளப் பெருமாள் எம்பெருமானார் ஆராதனப் பெருமாளுக்குப் பொறுப்பு. கிடாம்பி பெருமாள், ஆச்சான் இருவரும் மடைப்பள்ளியைக் கவனிப்பர்.

வடுகநம்பி எண்ணைக் காப்பு சாற்றுவர், கோமடத்துச் சிறியாழ்வான் கலசப்பானை, பாதரஷை எடுப்பர்.

பிள்ளையுறங்காவில்லி கருவூலம் நோக்குவர். இப்படி பல குற்றேவல்களும் பலர் விரும்பிச் செய்வர்.

## பல்வகைப் பணிகள்

எழுபத்து நான்கு சிம்மாசனாதிபதிகளை நியமித்து, அருளாட்சி புரிந்தார் இராமாநுஜர். அக்காலத்து குறுநில மன்னர் சிலரும் இராமாநுஜருக்கு ஆதரவாக இருந்தனர். ஆண்கள், பெண்கள், படித்தவர், பாமரர், அரசன் ஆண்டி, ஏழை, பணக்காரன் என்ற வேற்றுமைகளைக் கடந்து உயர்குலம், தாழ்குலம் இல்லாத பாகவத சமுதாயம் ஒன்றை உருவாக்கி ஸ்ரீரங்கத்தில் வைகுந்த வாழ்வைக் கண்டார் இராமாநுஜர்.

ஆயினும் மண்ணுலகின் இயல்பை யாரே மாற்ற இயலும்? இடையூறுகள் பல நேர்ந்தன.

கோயில் நிர்வாகம் சீராக நடைபெறவும், ஸ்ரீரங்கச் செல்வம் சிந்தாமலும், மங்காமலும் பொங்கும்படி ஆராய்ந்து திட்டமிட்டு ஆற்றலும், ஒழுக்கமும் உள்ளவர்களிடம் கைங்கர்யத்தை ஒப்படைத்தார்.

கோயிலைச் சுற்றி ஊர் அமைப்பிலும் பல அரிய ஏற்பாடுகளைக் கண்டு இன்றும் நாம் வியக்கலாம். பலவகைத் தொழிலாளர்கள், வீதி செப்பனிடுபவர், காவேரிக்கரை காப்போர், சுற்றுக்கோயில் சீரமைப்போர் போன்ற ஊழியர்களுடன் ஊதியத்துக்கும் வழிதேடி வைத்தார்.

மண்பானை வனைவோர், மரத்தச்சர், கல்தச்சர், ஓவியர், தையற்காரர், இசை வல்லோர், நாட்டியக்காரர் போன்ற நுண்கலைச் செல்வர்களையும் நியமித்து வைத்தார்,

கணக்கர்கள், கோபாலர்கள், மாட்டுவாகட மறிந்தோர், மூலிகை மருத்துவம் உணர்ந்தோர் இவர்களுக்கும் அரங்கன் முற்றத்தில் இடளித்தார்.

மடத்தில் இலக்கண, வேத ஆராய்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்தார், வேதம், திவ்ய பிரபந்தம் இவை ஓதவும் சமய நூல்கள், சம்பிரதாய கிரந்தங்கள் ஆராயவும் அதில்வகை செய்திருந்தார். அவர் தொடாத துறையே இல்லை என்னும்படி தத்துவ ஹித புருஷார்த்தங்களுக்கு வேண்டிய அனைத்தும் செய்து வைத்தார்.

மைசூரிலிருந்து மீண்டு வந்து இருபது ஆண்டுகளே ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்தாலும் பிற்கால வைஷ்ணவத்தின் வளர்ச்சிக்கு உறுதியான அடிப்படைகளை நன்கு அமைத்துவிட்டார்,

பிள்ளை உறங்காவில்லிதாசர், கூரத்து ஆழ்வான் இவர்களைப் பிரிந்த சோக நிகழ்ச்சிகளும் அவர் கண்முன் இடம் பெற்றன.

## திருப்பதியில் கோயில் பணி

சோழ அரசனால் தில்லை சித்திர கூடத்திலிருந்து கடலில் வீசப்பட்ட கோவிந்தராஜனை திருப்பதியில் பிரதிஷ்டை செய்து விரிவான அடிப்படையில் கோயில் அமைத்தார்.

## ஆய்ச்சிக்கு மோட்சம்

திருப்பதியில் கோயில் பணியை மேற்கொண்டிருந்த போது உடையவர் மடத்துக்குத் தயிர் கொடுத்து வந்த தும்பையூர் கொண்டி என்னும் ஆய்ச்சி தனக்குப் பணம் வேண்டாமென்றும் அதற்குப் பதிலாக நல்லகதி கொடுக்கும்படி திருவேங்கமுடையானுக்கு சிபாரிசு ஓலைத் துணுக்கு ஒன்று தர வேண்டும் என்று கோரினாள். அவளுக்குப் பசியாற உணவளித்து, அவள் நம்பிக்கைக்கு ஏற்ப ஓர் ஓலை நறுக்கும் எழுதிக் கொடுத்தார் உடையவர். திருமலை திருப்பதி கோயில் கைங்கர்யத்துக்காகத் தனியே மடம் நிறுவி 'பெரிய கேள்வி' ஜீயரை நியமித்தார்.

## கோயில் சாவி

ஆழ்வான் இருந்தபோது அவரது சிஷ்யருள் ஒருவரான அமுதனாரிடமிருந்து கோயில் சாவியை உடையவர் பெற்றது ஒரு சுவையான நிகழ்ச்சி. அமுதனார் தாயார் பாகவத தர்மத்தை மேற் கொண்டவள். அமுதனாருக்கு அப்போது வைஷ்ணவத்தில் ருசி இல்லை. கோயில் ஸ்தானிக உரிமை இருந்தது. அதற்கான சாவியும் அவரிடம் இருந்தது. அமுதனார் தாயார் பரமபதித்த பின் சிராத்தமும் நடந்தது. தாயாரின் விருப்பத்துக்கு இணங்க அமுதனார் ஸ்ரீ வைஷ்ணவ வரை சிராத்தத்தில் போக்தாவாக வரிக்க வேண்டியிருந்தது. அமுதனார் உடையவர் உதவியை நாடினார். ஆழ்வான் இதை அறிந்து தாமே சிராத்த போக்தாவாக (பிதிரர் இடத்திலமர்ந்து உண்பவர்) செல்ல உடையவரிடம் அனுமதி பெற்று அமுதனார் இல்லம் சேர்ந்தார்.

ஆழ்வானைக் கண்டதும் அமுதனாருக்கு அளவற்ற திருப்தி. காரணம் தன் தாயார் அவரிடம் ஈடுபட்டு அவர் பெருமைகளைச் சொல்லியிருந்ததே. அத்தகையவர் வந்ததால் தாயின் திருவுள்ளம் மிக உகக்கும் என எண்ணி, ஆழ்வானைத் திருப்தி செய்யும் வகையில் எல்லா உபசாரங்களும் செய்து, நிறைய தக்ஷணையும் அளித்தார்.

ஆயினும் கோயிலின் நிர்வாகமும் அதற்கான சாவியும் எம்பெருமானாரிடம் இருக்க வேண்டுமென்பதே ஆழ்வானின் திருவுள்ளமாயிருந்ததை ஊகித்து அறிந்து, ஆழ்வானின் மனம் உவக்க கோயில் சாவியை சிராத்த தக்ஷணையாக சமர்ப்பித்து நின்றார்.

ஆழ்வானுக்குப் பரம திருப்தி. உடனே எம்பெருமானாரிடம் சென்று, சாவியை அவரிடம் சேர்த்து விட்டார். கோயிற்பணிகள் முன்னிலும் சிறப்பாக நடந்தன. அமுதனார் ஆழ்வான் திருவடிகளில் ஆச்ரயித்து, ராமாநுஜ குணங்களில் ஈடுபடலானார். அதன் விளைவு ஓர் அற்புத அந்தாதி.

## இராமாநுஜ நூற்றந்தாதி

எம்பெருமானாரின் ஸ்வரூப, ரூப குணங்களில் ஆழ்ந்த அமுதனார் தாம் நேரில் அனுபவித்தபடி அச்சிறப்புக்களை "இராமாநுஜ நூற்றந்தாதி" பாசுரமாக்கி விட்டார்.

முதலில் அந்நூலை உடையவர் ஏற்கவில்லை. பின்னர் சில திருத்தங்களுடன் மனம் உவந்து ஏற்றுக் கொண்டார். திவ்யப் பிரபந்தங்களுடன் சேர்ந்து, "பிரபந்ந காயத்ரி" என்னும் ஏற்றமும் அந்நூல் பெற்றது.

தமிழிலுள்ள அந்தாதிகளில் அதற்கு நிகரான நூல் இல்லை எனலாம்.

**கையில் கனி என்னக் கண்ணனைக் காட்டிலுத் தரிலும் - உன்தன்**
**மெய்யில் பிறங்கிய சீர் அன்றி வேண்டிலன் யான் - நிரயத்**
**தொய்யில் கிடக்கிலும், சோதி விண் சேரிலும் இவ்வருள் நீ**
**செய்யில் தரிப்பன் - இராமாநுசா என செழுங் கொண்டலே**

என்று ஸாக்ஷாத் மன்மத மன்மதனான கண்ணனின் அழகையும் கால் கடை கொண்டு, உடையவர் திருமேனியில் பிறங்கிய சீரில் ஈடுபடுகிறார் அமுதனார்.

உடையவர் ஸ்ரீ பாஷ்யம் அருளியது போல், ஆளவந்தாரின் கீதார்த்த ஸங்க்ரஹத்தை அநுசரித்து பகவத்கீதைக்கு அற்புதமான பாஷ்யம் ஒன்றையும் அருளிச் செய்தார்.

".... மாயன் அன்று ஐவர் தெய்வத் தேரினில் செப்பிய கீதையின் செம்மைப் பொருள் தெரியப் பாரினில் சொன்ன இராமாநுஜனை" கீதா பாஷ்யப் பெருமையையிட்டுக் கொண்டாடுகிறார் அமுதனார்.

## திருவாய்மாழி ஈடுபாடு

நம்மாழ்வாரிடத்தும் அவர் அருளிச் செய்த திருவாய் மொழியிலும் இராமாநுஜருக்கு அளவற்ற ஈடுபாடு.

மாறன் அடிபணிந்து உய்ந்தவன், தம்மை சடகோபன் பொன்னடி என்றே அழைக்குமாறு வேண்டினார்.

**எய்தற்கு அரிய மறைகளை ஆயிரம் இன்தமிழால்**
**செய்தற்கு உலகில் வரும் சடகோபனை**
**உய்தற்கு உதவும் இராமாநுஜன் உன் உறுதுணையே-**

என்றும் "மாறன் விளங்கிய சீர்நெறி தரும் முத்தமிழ் ஆரணமே என்று இந்நீள் நிலத்தோர் அறிதர நின்ற இராமாநுசன் எனக்காரமுதே" என்றும், தென்குருகைப் பிரான் பாட்டென்னும் வேதப் பசுந்தமிழ் தன்னை தன்பக்தி என்னும் வீட்டின் கண் வைத்த - இராமாநுசன் என்றும்,

"மாறன் பணித்த மறையுணர்ந்தேன் - திருவாய் மொழியின் மணம் தரும் இசைமன்னும் இடம் தோறும் புக்குநிற்கும் குணம் திகழ் கொண்டல்" என்றும் பலபடியாகக் கொண்டாடுகிறார் அமுதனார்.

## உடையவர் அருளிய நூல்கள்

நவரத்னம் போல் ஒன்பது நூல்களை உடையவர் அருளிச் செய்துள்ளார். 1. ஸ்ரீ பாஷ்யம், 2. வேதாந்த தீபம், 3. வேதாந்த ஸாரம், 4. வேதார்த்த சங்க்ரஹம், 5. கீதாபாஷ்யம், 6. சரணாகதி கத்யம், 7. ஸ்ரீரங்க கத்யம், 8. வைகுண்ட கத்யம், 9. நித்யம் முதலியன வைதிகர் இசையும்படி அமைந்தவை அவரது வடமொழி நூல்கள்; வைஷ்ணவர் உகக்கும்படி அமைந்தது அவரது வாழ்வுநெறி; அவரது வடநாட்டு விஜயத்தால் அங்கு பல வகையான வைஷ்ணவ நெறிகள் தோன்றி வளரலாயின.

ஸ்ரீரங்கம் மீண்டபின் தென்பகுதியில் யாத்திரை செய்து மாலிருஞ்சொலை மணாளருக்கு ஸ்ரீ ஆண்டாள் வாய் நேர்ந்து வைத்த நூறு தடா வெண்ணையும், அக்கார வடிசலும் ஸமர்ப்பித்து, பின் ஆண்டாளைச் சேவித்து 'எம் அண்ணரே வருக!' என்ற கோதை நாச்சியார் கூப்பிடும்படி அபிமானம் பெற்றார்.

## தாம் உகந்த திருமேனி

இராமாநுஜர் இப்பொழுது பழுத்த பழமாகி விட்டார். காம்பு இற்று விழும் தசை எய்தினார். முதலியாண்டான் குமாரர் கந்தாடை ஆண்டான்.

எம்பெருமானாரை மிகவும் உகப்பித்து உடையவர் அவதரித்த ஸ்ரீபெரும்புதூரில் எல்லாக் காலத்திலும் எல்லாரும் சேவிக்கும்படி அவரது அர்ச்சா விக்ரஹம் ஒன்றை ஏறியருளப்பண்ண அனுமதி வேண்டினார்.

எம்பெருமனார் இசையவே, அவர் சிறப்புக்குச் சேர அவரிடம் பக்தி நிறைந்த திறன்மிக்க சிற்பி ஒருவரைக் கொண்டு ஓர் அழகிய திருமேனியை உருவாக்க ஏற்பாடு செய்தார். பக்தனான சிற்பியும் இராமாநுஜ த்யானத்தோடு திவ்யமான விக்ரஹத்தை ஏறியருளச் செய்திட்டான்.

அதைக் கண்ட உடையவர் மிக உகந்து ஆலிங்கனம் செய்து, தம் ஆவியே தழுவ நின்றார். ஸ்ரீரங்கத்திலிருந்து அந்தத் திருமேனியை ஸ்ரீ பெரும்பூதூருக்கு எழுந்தருளச் செய்து, குரு புஷ்ய நாளில் ப்ரதிஷ்டை செய்தனர். அந்த தினத்தில் கோயிலில் உடையவர் திருமேனியில் மிகவும் தளர்த்தி தோன்றிது. அப்போது அவருக்கு வயது நூற்றிருபது.

உடையவர் திருவுள்ளம் தம் முன்னோரான "அந்தமில் பேரின்பத்து அடியரோடு" கூடுதற்கு அவாவி நின்றது.

தமது சிஷ்யரெல்லாரையும், எல்லாவிடத்தும் சொல்லி அனுப்பிக் கூட்டுவித்தார். பெரிய பெருமாள் சந்நிதியில் பட்டருக்குத் தீர்த்தப் பிரஸாதம் முன்னாக வழங்கி 'மேல் நாட்டில் வேதாந்த என்னும் வித்வான் உண்டு. அவரைத் திருத்திப் பணி கொள்ளும்' என்று கூறிவிட்டு சிஷ்யர்களை நோக்கி, ஆறு விதமான கைங்கர்யங்களை உங்கள் வாழ்நாளில் செய்து வாருங்கள் என அருளிச் செய்தார்.

## உடையவர் இட்ட ஆறு கட்டளைகள்

1. ஸ்ரீ பாஷ்யத்தை வாசித்தும் வாசிப்பித்தும் போருவது; அதுமுடியாதவர்
2. திவ்யப் பிரபந்தங்களை ஓதியும், ஓதவித்தும் போருவது; அதுவும் இயலாதெனில்,
3. திவ்ய தேசங்களில் அமுதுபடி, சாத்துப்படி முதலானவை நடத்திப் போருவது; அதுவும் இல்லை எனில்,
4. திருநாராயணபுரத்தில் ஒரு குடிசையாகிலும் கட்டிக் கொண்டிருப்பது; அதுவும் முடியாவிடில்
5. துவயத்தை அர்த்தத்துடனே அநுஸந்தித்திருப்பது; அதுவும் மாட்டாராகில்,
6. ஒரு பாகவதன் அபிமானத்திலே ஒதுங்கி இருப்பது.

இப்படி ஆறு கட்டளைகளில் முடிந்ததை, செய்து பகவத் பாகவத அஸஹ்யாபசாரங்கள் நேராதபடி பார்த்துக் கொள்ளுங்கள் என்றார்.

## தமக்குப் பின்

அவரது பிரிவை ஊகித்தறிந்த பக்தர்கள் சிலர் அதை தாள மாட்டாமல் தற்கொலை புரிந்து மாள முனைந்தனர். அவர்களை ஆணையிட்டுத் தடுத்து, ஆறுதல் அடைய எண்பத்திரண்டு வார்த்தைகள் அருளிச் செய்தார். பின்பு நடாதூராழ்வானைக் குளிர நோக்கி, ஸ்ரீ பாஷ்ய சிம்மாசனத்தை அவருக்கு அளித்தார்.

முக்கிய ப்ரமாணமான ஆழ்வார்களுடைய ஸ்ரீ சூக்தி சிம்மாசனத்தை பெரிய பட்டருக்கு அருளினார்.

பின்னர் தமக்குச் செய்ய வேண்டிய இறுதிக் கடமைகளைச் செய்வது, தம்மை பள்ளிப் படுத்துமிடத்தில் விக்ரஹம் அமைக்கும் பொறுப்பு இவைகளை கந்தாடை ஆண்டானிடம் வைத்தார்.

திருக்குருகைப்பிரான் பிள்ளான் முதலானோரை பட்டருக்குத் துணை புரிய நியமித்தார்.

## உடையவர் கேட்ட மன்னிப்பு

கோயில் ஊழியர்களை அழைத்து ஏதேனும் தவறு இழைத்திருந்தேனாகில் மன்னித்து அருளுங்கள் என்றார். பிறகு பெரிய பெருமாள் தீர்த்த ப்ரஸாதங்களைப் பெற்று எம்பார் மடியில் முடியும் வடுகநம்பி மடியில், திருவடிகளுமாய், கோயிலக்கு எதிரில் கண் வளர்ந்தருளினார்.

ஆளவந்தார் திருவடிகளை தியானித்துக் கொண்டு அடியார் எல்லோரும் ஸ்ரீசூக்தி அனுபவங்களைச் செய்ய, பிங்கள வருஷம் சித்திரை மாதம் சுக்லபஷம் தசமி திருவாதிரையில் நண்பலில் சேஷாவதாரமான எம்பெருமானார் ஆதிசேஷனுடன் சேர்ந்தருளினார்.

**சீராரும் எதிராசன் திருவடிகள் வாழி**<br>
**திருவரையில் சார்த்திய செந்துவராடை வாழி**<br>
**ஏராரும் செய்யவடி வெப்பொழுதும் வாழி**<br>
**இலங்கிய முந்நூல் வாழி இணைந்தோள்கள் வாழி**<br>
**சோராத துய்ய செய்ய முகச்சோதி வாழி**

தூ முறுவல் வாழி துணைமலர்க் கண்கள் வாழி
ஈராறு திருநாமம் அணிந்த எழில் வாழி
இனிது இருப்போடு எழில் ஞான முத்திரை வாழியே

மணவாள மாமுனி

மேல்கோட்டையில் அடியார்கள் எம்பெருமானார் பிரிவாற்றாமையால் வேண்டி விரும்பியபடி அமைந்த, உடையவர் திருமேனி திருநாராயணபுரம் சந்நிதியில் உள்ளபடி

**எம்பெருமானார் திருவடிகளே சரணம்!**




ஹிந்து அனைவரும் சகோதரர்கள்,
ஹிந்து எவருமே தாழ்ந்தவராகார்
ஹிந்துவைக் காப்பது என் விரதம்,
சரிசமானமே எனது மந்திரம்.

திருமால், திருப்பதி



# செயல் திட்டங்கள்

- ''ஓம் நமோ நாராயணாய'' மந்திரத்தை தினமும் ஜபித்தல்.
- இராமாநுஜர் படத்திற்கு கிராமந்தோறும், வீதிதோரும் புஷ்ப அர்சனை செய்தல்.
- மார்கழி மாதம் ஒவ்வொரு நாளும் காலையில் பஜனை செய்து ஊரின் எல்லா முக்கிய வீதிகளிலும் வலம் வருதல்.
- சமுதாய ஆன்மீக தலைவர்களின் சந்திப்பு.
- பள்ளி, கல்லூரிகளில் இராமாநுஜர் பற்றிய பேச்சு, இசை, ஓவிய, கட்டுரைப் போட்டிகள், நாடகங்கள், பட்டிமன்றங்கள் நடத்துதல்.
- இராமநுஜர் உருவ சிலை அல்லது படத்துடன் ரதயாத்திரை நடத்தி கிராமங்களில் முக்கிய இடங்களுக்கு பொது மக்களின் புஷ்ப அர்சனை எடுத்து செல்லுதல்
- மரம் நடும் விழா நடத்துதல்.
- ஏழைகளுக்கு மருத்துவ முகாம்கள் நடத்துதல்.
- இராமாநுஜரின், சமுதாய நல்லிணக்கம், ஆன்மீக மற்றும் சேவை கொள்கைகளை தமிழகமெங்கும் பரப்ப பொதுக் கூட்டங்கள், சொற்பொழிவுகள் நடத்த ஏற்பாடு செய்தல்.
- நகரங்களிலும், கிராமங்களிலும் உள்ள பஜனை மடங்கள், இராமாநுஜ கூடங்கள் இவற்றை பயன்பாட்டிற்கு கொண்டு வருதல்.

